1

# Cottage Songs

# பாட்டுகளும் கீதங்களும்

# கீர்த்தனைகளும்



...OF THE REGISTRAR OF...
3-JAN

J. H. டாஸ்பிள்ளையவர்களால்

இயற்றப்பட்டது



பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ்

1934

...ட்டது] [விலை ரூ. 1

இ6:417
N34
67747

# Cottage Songs

OFFICE OF THE REGIS... 7-JAN 1935 MADRAS

# பாட்டுகளும் கீதங்களும் கீர்த்தனைகளும்



J. H. டாவ்ஸ்பிள்ளையவர்களால்

இயற்றப்பட்டது



பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ்

1934

ரிஜிஸ்ட்டர் செய்யப்பட்டது ] [விலை ரு. 1

# முகவுரை

சர்வ வல்லமை பொருந்திய தெய்வத்தின் நாமத்திற்கு மகிமையாகவும், துதியாகவும் சிருஷ்டிகளாகிய நமக்குப் பிரயோஜனமாகவும் சிருஷ்டி கர்த்தாவாகிய, அவரிடம் நம்மை அதிகமதிகமாய்க் கிட்டிசசேர்த்து அவரது அன்பை நாம் ருசிக்கவும், அவருச்கு உத்தம பிள்ளைகளாக ஊழியஞ்செய்யவும், அவருடைய ஏக சுதனுகிய நம் ரக்ஷகர் சொல்லிப்போனபடி சர்வ மானிட சிருஷ்டிக்கும் சத்திய சுவிசேஷம் பிரசங்கிக்கப்பட அனுகூலமான ஏதுகரமாக இருக்கவும் வேண்டுமென்ற நோக்கத்தோடு இச்சிறு புஸ்தகம் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அந்நோக்கம் முற்றும் சித்திபெறப் பரமபிதா தாமே அருள் செய்வாராக.

இதில் அடங்கிய பாட்டுகளும் கீதங்களும் கீர்த்தனைகளும் தேவாரங்களும், தயாபரச்கண்ணிகளும் எங்கள் அருமைத் தசப்பனுரவர்கள் குடும்ப ஜெபத்திலும் ஸ்தோத்திர ஜெபக்கூட்டங்களிலும் தனி ஜெப தியானங்களிலும் எங்களுக்கும் மற்றவர்களுக்கும் பிரயோஜனமாக இருக்கும்படி அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட கிருபைகளைக் கைப்பிரிதிகளால் அப்போதைக்கப்போது குறித்துவைத்துப் பின் அச்சிடும்படியாக விரும்பினுர்கள். ஆனுல் சுகவீனத்தினிமித்தம் தடைபட்டுவிட்டது; அவர்கள் விருப்பப்படி இப்போது அச்சிடப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு சரித்திரமும் ஒவ்வொரு காலமும் சம்பவமும் உண்டு. அவைகளை அவர்கள் ஒவ்வொரு பாட்டின் தலைப்பிலும் சுருக்கி எழுதி முடிக்கக் கூடாமற்போய்விட்டது.

இரண்டாவது பாகத்திலுள்ள, தேவாரங்கள் தயாபரக்கண்ணிகள் முதலியவைகள் அவர்கள் கடைசிக்காலத்தில் தங்களுக்கும் பின்னடியாராகிய நம்மெல்லாருக்கும் பிரயோஜனமாக இருக்கும்படியாக எழுதப்பட்டவை.

அவர்களுக்கு வெளிப்படுத்தப்பட்ட சத்தியங்களை ஏனையர் அறியவும் அவற்ருல் கிடைக்கக்கூடிய கிருபைகளையும் ஞான நன்மைகளையும் யாவரும் பெற்றனுபவிக்கவும் அவர்கள் ஆசித்தபடி நடந்தேற இரக்கமுள்ள தேவன் கிருபை செய்வாராக. ஆமென்.

J. T. தேவதாஸ் பிள்ளை,
J. கிறிஸ்துதாஸ் பிள்ளை,

# பிழை திருத்தம்

---

| SONG | VERSE | LINE | FOR | READ |
| --- | --- | --- | --- | --- |
| 4 | 1 | 3 | மற்றோய் | மற்றோனாய் |
| 6 | 3 | 2 | ஆத்மா என்மேல் | என்மேல் ஆத்மா |
| 11 | 2 | 2 | வாராயே | வராயே |
| 19 | 4 | 4 | ஜெயித்தானே | ஜெயித்தோனே |
| 32 | 2 | 1 | மீட்பர் | மீட்பா |
| 38 | 1 | 7 | தோ | 'தோ |
| 40 | 2 | 3 | கெட்டலைந்தேன் | கெட்டலைந்தோன் |
| 49 | 2 | 1 | மாண | மர்ண |
| 54 | 3 | 2 | நோக்கி | நோக்க |
| 57 | 2 | 1 | செய்வே | செய்யவே |
| 73 | 1 | 3 | எம்மை | உம்மை |
| 79 | 1 | 4 | மளையாளு | மனையாளும் |
| 87 | 2 | 2 | இன்னுமும் | இன்னமும் |
| ,, | 3 | 4 | நகரில் | நரகில் |
| 90 | 3 | 6 | பாக்கும் | பார்க்கும் |
| 106 | Chorus | 3 | தெதன்னை | தென்னை |
| ,, | 2 | 3 | கருபை | க்ருபை |
| 111 | 2 | 3 | திட்ட | தீட்ட |
| ,, | 8 | 3 | தேனல்லாதது | தேவனல்லாதது |
| 3 | 10 | 2 | ஆதம | ஆதம் |
| 5 | 5 | 1 | எறகா | எற்கா |
| ,, | 13 | 3 | வில்லாமல் | வில்லால் |
| ,, | 25 | 4 | நின்றாளும் | நின்றாலும் |

| SONG | VERSE | LINE | FOR | READ |
|---|---|---|---|---|
| 6 | 5 | Footnote | கொ் | 1 கொ |
| 7 | 5 | ,, | ,, | ,, |
| ,, | 6 | ,, | ,, | ,, |
| ,, | 9 | ,, | 3: 2; 21 | 3: 20, 21 |
| 8 | 5 | 4 | நான்னவி | நான் வை |
| 9 | Heading | | தீமோ. : 16 | தீமோ 3: 16. |
| ,, | 11 | Footnote | 57: 4 | 57: 14 |
| ,, | ,, | ,, | வெளி. 30: | வெளி. 3: |
| ,, | 20 | 1 | ஸ்நனம் | ஸ்நாநனம் |
| 10 | 23 | Footnote | 1 கொரி. 5 | 1 கொரி. 15: 5 |
| 11 | 5 | 3 | சுத்தம் | சத்தம் |
| 13 | 3 | 2 | காத்தவர் | காத்தவா |
| ,, | ,, | 3 | ரிருளின | ரிருளின் |
| 17 | 1 | 1 | பாவத்தில | பாவத்திலே |
| 25 | 6 | 2 | காண் | காண |
| 18 | 5 | 1 | தூங்கி | தூக்கி |
| 16 | 1 | 5 | ஆற்கல் | ஆற்தல் |
| 14 | 9 | 1 | வல்வ . | வல்ல |
| 15 | 9 | 4 | கானும் | காணும் |
| II. 22 | 1 | 4 | விடாரோ | விடாரே |
| 25 | 3 | 2 | யனைத்தீர் | யணைத்தீர் |

# "Salvation"

## 1

*A ruler once came.*

10, 12, 10, 7

1 நீ பரலோகமே போக வென்றால்
அங்கே நித்திய பேரின்பம் சேரவென்றால்
யேசுவின் வார்த்தையைக் கீழ்ப்படிவாய்
மறு ஜென்மம் பெறுவாய்.

*Chorus* மறு ஜென்மம் பெறுவாய்
மறு ஜென்மம் பெறுவாய்
மெய்யாக மெய்யாகச் சொல்லுகிறேன்
மறு ஜென்மம் பெறுவாய்.

2 நீ பரிசுத்தனே ஆகவேண்டும்;
இங்கே யேசுவின் பக்தரைச் சேரவேண்டும்;
மெய் மனஸ்தாபம் அடைந்திடுவாய்
மறு ஜென்மம் பெறுவாய்.

3 உத்தம ஆவி உன் உள்ளத்திலே
சாட்சி இட்டு நீ புத்திரன் என்றிடவே
யேசுவின் ரத்தமே நீ நோக்குவாய்
மறு ஜென்மம் பெறுவாய்.

4 யேசுவின் சாட்சியாய் நீ விளங்க
லோக மாம்சக் கறைகளே யாவும் நீங்க
கிறிஸ்துவின் ஆலயம் ஆகிடுவாய்
மறு ஜென்மம் பெறுவாய்.

---

## 2

*Grace there is my every debt.*

10's

க்ருபை உண்டென் கடன்யாவும் தீர்க்க,
ரத்தம் உண்டென் பாவக் கறை நீக்க,
பலம் உண்டு சுத்தம் தினம் காக்க
க்றிஸ்துவிலே.

2 வல்லமை உண்டு சத்ருவை வெல்ல
தைரியம் உண்டு பிசாசை துரத்த
சக்தி உண்டு பூமி சுவர்க்கமாக்க
க்றிஸ்துவாலே.

---

## 3

*The Cross, the Cross.*

8, 6

1 இரத்தம் பாயும் சிலுவையே
உன்னை நான் நோக்குவேன்;
உன் மேல் சிந்தின ரத்தம்தான்
எனக் கென்றறிவேன்.

*Ch.* இரத்தம் திவ்ய ரத்தமே
இயேசு சிந்தினாரே
சிலுவையில் பாடு பட்டோராய்
மாண்டாரே எனக்காய்.

2 பாவப் பாரச் சிலுவை தான்
என்னால் சகித்தீரே
துயர் தாழ அமிழ்த்திற்றே
கல்வாரி மேட்டிலே

3 இப்போ சிலுவை மேலேசல்லோ
யேசுவே உம்மால் தான்
சந்தோஷமாய் ஏற்றுக்கொள்வேன்
கிரீடம் பெறுவேன் நான்.

4 க்ரீடம் மகிமை க்ரீடம் தான்
ஜெயக் கிரீடமே
ஜீவ க்ரீடம எனக்குண்டு
ஏசை நான் பார்க்கச்சே.

5 நீர்த் தாரைகள் என் கண்களில்
பேரன்பால் ஓடுது
லோகத்தில் துன்பம் நான் தாங்க
பேரின்பம் காட்டுது.

---

## 4

### *Clinging to the Cross.*

8, 7

1 அகோர பாவ உளையில்
நிர்ப்பந்தனாய்க் கிடந்தேன்;
நம்பிக்கை ஏதுமற்றோய்
காரிருளி லிருந்தேன்.

*Ch.* சிலுவையை நான் விடேன்
சிலுவையை நான் விடேன்
சிலுவையை நான் விடேன்
சிலுவையை நான் விடேன்
சிலுவையை நான் விடேன்
சிலுவையை சிலுவையை
நான் விடேன்.

2 தேவ மைந்தன் உருக்கமாய்
என் துயரம் நோக்கினார்;
ஓ பார்த்தார் ஒப்பற்ற நேசம்
மீட்க விரைந்து பாய்ந்தார்.

3 விண்ணி லிலங்கும் பொன்னாஸ்னம்
சந்தோஷமாயே விட்டார்;
மாம்சத்தில் சென்றார் கல்லறை
செத்தோருடனே தங்கினார்.

4 ஓ மலைகள் இவ்வன் பிற்காய்
மௌனம் நீங்கித் துதிக்கும்;
சர்வ மனுகுல நாக்கள்
மீட்பர் துதி சொல்லட்டும்.

5 தூதர் எம் மகிழ் சேருமேன்
பொன் வீணைகள் மீட்டுமே;
உம் சங்கீத ஆரவாரம்
அவரன்பு மிஞ்சாதே.

6 கெத்செ மெனே காரிருளாம்
உன்னிலே கேட்குதே;
ஏழைக் கலிலேயன் பேசும்
சத்தம் எனக்காய்ப் பரிந்தே.

7 தனியாய்ச் சாகிறார் என்னால்
துயர் பாவம் சுமந்தே;
நாவு அவ் வியாகுலம் சொல்மோ
ரத்த வேர்வை பேசுதே.

8 அதோ சாவ்டம் வீழ்கிறார்
தேவ நேச மைந்தனே;
இன்னும் சோர்ந்துஅழுகிறார்
பிதா உம் சித்தமே

9 ஜெயம் எனக்காய் செய்கிறார்
என்னை ஏற்றுக் கொள்வாரே;
என் பாவம் நீக்கும் ஏகவே
உம்மை நம்பினேனே.

10 இரத்தம் கண்ணீர் மறப்பேனோ
எனக்காய்ச் சிந்தினாரே;
ஓயா சுத்தம் செய்யும் வெள்ளம்
ஏராளம் இலவசமே.

---

## 5

Tune: *Unto Him that loved us*
*or There is a fountain etc.*

8, 6

1 கேள்! கேள்! இரட்சிப்பின் கீதமே
ஸ்தோத்ரம் புகழ் கீதம்
கர்த்தரைப் போற்றும தொனிதான்
விண்ணோர் துதி சத்தம்.

*Ch.* போற்றும் நம்மை நேசித்தோரை
இரத்தம் சிந்தி மீட்டார்
பாவ தோஷக்கறை யாவும்
நீக்கிக் கழுவினார்.

2 வெண்மையாம் யேசு ரத்தத்தால்
அங்கி இலங்குதே.
ஆத்மா புதுமை பெற்றது
திவ்ய சத்தியத்தாலே.

3 மேற்கொண்டோம் யேசின் ரத்தத்தால்
சாத்தான் சேனையையே;
திவ்ய சத்திய பலத்தால்
எனக்கு ஜயமே.

4 துதி தேவாட்டுக் குட்டிக்கு
'ஜீவன்' 'ஒளி' ஊற்றே
கனம் மகிமை வல்லமை
புகழும் அவர்க்கே.

---

## 6

Tune: *Lord, I hear af showers.*
8, 7, 8, 7

அதோ! ஆத்மாவே! வானின் சத்தம்
"மன்னிப்பு உனக்குண்டு".
வா! மன்னிப்பு இலவசம்
க்ருபை உன்மேல் பாயுது.

2 பார் சொஸ்தம் செய் ஊற்று பொங்கும்
தொங்கும் ரட்சகர் விலாவில்.
மன்னிப்பு, சமாதானம, தரும்
சுத்தமும் உன் உள்ளத்தில்.

3 கேள்! அன்பில் இரக்கம் பேசும்
"வா! ஆத்மா என்மேல் வையேன்.
பாவத்தால் நொறுங்கி மாண்டாலும்
உனக் காறுதல் நான் தாரேன்".

4 இப்போ யேசுவண்டை நீர் வாரும்
பாவம் சஞ்சலம் போமே;
பாரத்தாலே தோய்ந்து சாகும்
உன்னை அவர் ஏற்பாரே.

5 அங்கே அன்பில் என்றென்றும் தங்கும்
ஏசு உன் சந்தோஷமே
உந்தன் கீதம் என்றும் சொல்லும்
உனக் கிரக்கம் செய்ததே.

---

## 7

*Wash me ... cleanse me from my sin.*

Ps. 51: 2

8, 6,

1 உன்னதமான தேவனே
என் பாவம் அதிகம்;
என் முகத்தின் முன் நிற்குதே
என் குற்றம் எப்போதும்.

2 தேவரீருக்கே விரோதமாய்
பாவம் மிகச் செய்தேன்;
கோபாக்கினை அதிகமாய்
ஆவியா லுணர்ந்தேன்.

3 சுத்த இதயம் நீர் என்னில்
நித்தம் சிருஷ்டியும்;
உத்தம ஆவி உள்ளத்தில்
வைத் தெப்போதும் தாங்கும்.

4 சந்தோஷப் பாட்டையும் தந்து
என் நிந்தை நீக்கிடும்;
நொந்த இதயம் உள் வந்து
சொந்தமாய் ஆண்டிடும்.

5 அப்போ தெல்லாப் பாதகரும்
மெய்ப் போதகம் அடைவார்;
இப்போதைக்கும் என்றென்றைக்கும்
மெய்ப் பலியை இடுவார்.

---

## 8
## *Jesus is calling.*
10, 10, 10, 7

1 இயேசு தன் வீட்டுக்கு உருக்கமாய்
அழைக்கிறாரே அழைக்கிறாரே.
ஏனவர் அன்பை விட்டலைகிறாய்
தூரமாய் தூரமாயே?

*Ch.* அழைக்கிறார், அழைக்கிறார்,
இயேசு உன்னையே உருக்கமாய் அழைக்கிறார்.

2 இளைத்து தவித்தோன் இளைப்பாறேன்,
அழைக்கிறாரே! அழைக்கிறாரே!
பாரத்தை நீக்குவார், வந்து பாரேன்
ஓர்காலும் தள்ளிடாரே.

3 இயேசு தவிக்கிறார், இப்போதே வா
காத்துக் கொண்டே அவர் நிற்கிறாரே
பாவத்தால் நொந்தவர் பாதத்தில் வா
தச்சணம் மன்னிப்பாரே.

4 இயேசுன்னைக் கெஞ்சுறார் இடம்கொடு
இந்நிமிஷமே நீ செவி கொடேன்
நம்பியே ஆத்மத்தில் களிகூர்ந்து
குதித் தெழும்பிப் போற்றேன்.

---

## 9

### *Seeking for me.*

10, 10, 10, 6,

1 ஏசு என் ரட்சகர்—பாழுலகில்
நீச கோலமானார் புல்லணையில்
என்ன அதிசயம் தேவன் அன்பில்
தேடி வந்தார், வந்தார்.

2 ஏசு என் ரட்சகர் கல்வாரிமேல்
என் கடன் தீர்த்து என் பாவத்தின்மேல்
வெற்றியைத் தந்தார்—மாக்ருபை என்மேல்
உயிரைத் . தந்தே தந்தே.

*Ch.* என்ன அதிசயம் நீசனுக்காய் etc.

3 ஏசு என் ரட்சகர் நேசம் வைத்தார்; (மானார்)
நீசன் அலைந்தேன், பின் தொடர்ந்தார்
உருக்கமாய் என்னுடன் பேசுகிறார்;
மீட்டுக் கொண்டார், கொண்டார்.

4 ஏசு என் ரட்சகர்—வந்திடுவார்
இன்ப வாக்குத்தத்தம், சேர்த்துச்கொள்வார்
மேகத்தின் மேல் என்னை ஏற்றுக்கொள்வார்
ரட்சை செய்வார், செய்வார்.

---

## 10

### *Art thou weary,*

1 இளைத்தோன் வா! ஏசழைக்கிறார்
தன் விலா வண்டை
"என்னிடம் வந்திளைப்பாறு சுகமே"

2 ஏசோ தேவை? அவர் உன்னை
தேடி வந்தாரே
உன் இதயம் இன்னும் தட்டி நிற்கிறாரே

3 இரட்சிப்பார் இடம் கொடுத்தால்
சொந்த மாவாயே.
தாங்கிக் காத்து சாவில் மோட்சம் சேர்ப்பாரே.

4 அவர் ஈவைத் தள்ளுவாயோ
வேண்டாம் என்பாயோ
"துக்கத்துடன் நீர்போம்" என்று சொல்வாயோ.

5 ஜீவன் தோய்ந்து உந்தன் ஆத்மா
நொந்து போனதோ
ஏற்றுக்கொண்டு ஏசின் ஆறுதல் பாராயோ
(அல்லது) பார் இப்போ.

---

## 11

*Time is earnest.*

*7's.*

நேரம் கருத்தாய் ஓடுது,
சாவு விடாமல் அண்டுது,
பாவி இன்னும் மந்தமா,
நேரம் சாவு தங்குமா.

2 ஜீவன் "சுழல்" போகுமே,
நீ திரும்ப வாராயே,
நித்யம் சீக்கிரம் சேர்வாய்,
பின்னை விழிப்பாய் ஏன் இராய்.

3 தேவன் ஆவல் ஜெபியே,
க்ருபைக் காலம் போமுன்னே,
தீர்ப்பாசனம் போகுமுன்,
'தயை, போய் தீ வருமுன்.

4 மோசம்! ஓடு சாவு பின்,
நாசமாவாய் கொஞ்சம் பின்,
தூங்காதே எழுந்தோடே
மீட்பர் காத்து நிற்கிறுரே.

---

## 12

*Take me as I am.*

8, 8, 8, 6

1 யேசுவே உம்மை நோக்குவேன்;
தூக்காவிடில் நான் சாகுவேன்;
ரட்சிக்க கிட்ட வாருமேன்,
ஏற்றுக் கொள்ளுமையா.

12

*Ch.* ஏற்றுக் கொள்ளுமையா,
ஏற்றுக் கொள்ளுமையா,
ஆதாரமே — உம் பலியே
ஏற்றுக் கொள்ளுமையா.

2 திக்கற்றோன் பெரும் பாவியே;
என்றாலும் ரத்தம் சிந்தினீரே;
உம் சித்தம்போல ஆக்குமே;
ஏற்றுக் கொள்ளுமையா.

3 ஆயத்தம் என்னால் கூடாதே;
நல் தீர்மானம் வீணாகுதே;
உம் நாமத்தின் நிமித்தமே;
ஏற்றுக் கொள்ளுமையா.

4 ரட்சகர் பாதம் வீழ்ந்தேனே;
நன்மை ஏதோ நீர் செய்யுமே;
துவக்கினீர் முடியுமே;
ஏற்றுக் கொள்ளுமையா.

---

## 13

### *O Precious Words*

8, 6

1 அருமையாய் யேசு சொன்னார்:
என்னிடம் சேர்வோனை
ஓர்காலும் தள்ளேன் புறம்பே
யாரென்றாலும் உனே.

*Ch.* யாரென்றாலும் சரி etc.

2 அருமையாய் யேசு சொன்னர்:
இதோ! நானே வாசல்,
என் வழியாய் பிரவேசித்தால்
நித்திய ஜீவன் என்னில்.

*Ch.* நித்திய ஜீவன் உண்டு etc.

3 அருமையாய் யேசு சொன்னர்:
வா! நொந்திளைத்தோனே;
வா! நுகம் ஏற்றுக் கற்றுக்கொள்
தாரேன் ஆறுதலே.

*Ch.* தாரேன் ஆறுதலே etc.

4 அருமையாய் யேசு சொன்னர்:
ஜெய்த்தேன் நான் உலகம்;
என்னைப் பின் செல்வோர்க்கு உண்டு
என் நாமத்தால் ஜெயம்.

*Ch.* என் நாமத்தால் ஜெயம் etc.

5 அருமையாய் யேசு சொன்னர்:
நான் உன்னேடே கூட
இருப்பேன் முடிவு மட்டும்
உன்னைக் காத்துக்கொள்ள.

*Ch.* உன்னைக் காத்துக் கொள்ள etc.

---

## 14

### *Man of Sorrows*

1 தேவ மைந்தன் பெயரே
"வியாகுல மனுஷனே!"
கெட்டோர் மீட்க வந்தாரே!
அல்லலூயா! என்ன மீட்பர்.

2 நிந்தை தூஷ்யம் சுமந்து,
என் குற்றம் ஏற்று நின்று,
மன்னித்தார் ரத்தம் கொண்டு,
அல்லலூயா! என்ன மீட்பர்!

3 நான் நீசன் திக்கற்றோனே!
'வர் தேவாட்டுக் குட்டியே!
பிராயச் சித்தம் பேரன்பே!
அல்லலூயா! என்ன மீட்பர்!

4 தூக்கப்பட்டு மரித்தார்;
முடிந்ததென்று கூவினார்;
உயர்த்தப் பட்டிருக்கிறார்;
அல்லலூயா! என்ன மீட்பர்!

5 மகிமையாய் வருவார்;
மீண்டோரை வீடு சேர்ப்பார்;
அன்றிக் கீதம் பாடுவார்;
அல்லலூயா என்ன மீட்பர்.

---

## 15

*Thou didst leave Thy throne*

10, 8.

1 சிம்மாஸ்னம் விட்டீர், ராஜ கிரீடமும்;
என்னைத் தேடி வந்தபோது
பெத்லகேமிலோ கொஞ்சமிடமும்,
தங்க இல்லாமற் போயிற்று.

*Ch.* என்னுள்ளத்தில் வாரும், யேசு,
அங்கேயே நீர் தங்குமே
என்னுள்ளத்தில் வாரும் யேசுவே
அதை உமக்குத் தாரேனே.

2 வான் முழங்கிற்று தூதர் கீதத்தால்
உம் ராஜரீகம் போற்றவே;
ஆனல் கர்த்தரே நீச கோலமாய்
உலகிலே தோன்றினீரே.

3 நரிகளுக்குக் குழிகளுண்டு,
பட்சிகட்கும் கூடு முண்டே;
ஆனல் தேவ மைந்தா!' உம் மஞ்சமோ,
கலிலேயாக் காட்டின் புல்லே.

4 ஆண்டவா, வந்தீர் ஜீவ வார்த்தையால்,
உம் ஜனம் விடுவிக்கவே;
ஆனல் நிந்தையாய் முள்முடியுடன்
கொண்டுபோனர் கல்வாரிக்கே.

*Ch.* என்னுள்ளத்தில் வாரும், யேசு,
உம் ரத்தம் என் கெதியே;
என்னுள்ளத்தில் வாரும் யேசுவே,
உம் ரத்தம் என் கெதியே.

5 வான் முழங்கிட தூதர் பாடவும்,
ஜெய வீரனுய் வருங்கால்,
நீர் அழைத்திடும்! வா! இடமுண்டு';
உனக்கென் பக்கத்திலேதான் (பக்கம் ரத்தத்
*Ch.* என் உள்ளம் பூரிக்கும் யேசு(வே) [தால்)
நீர் என்னே அழைத்திடும்போது. (Repeat).

## 16

Tune: *Bright crowns there are.*

8, 6.

1 என்னிடம் வரும் பாவியை
ஓர்போதும் நான் தள்ளேன்;
மன்னிப்புப் பெற அவனை
இழுத்து ரட்சிப்பேன்.

2 நானே வழி சத்தியமே;
என்னிடம் வாருமேன்,
நானே நித்திய ஜீவனே !
ருசித்துப் பாருமேன்.

3 வாரும் பாவம் சுமந்தோரே
ஆறுதல் தருவேன்;
வாரும் கற்றுக் கொள்வீரே
என்னுகம் தாங்குமேன்.

4 நான் பேய் உலகம் ஜெயித்தேன்,
நீ என்னால் ஜெயிப்பாய் ;
நானுனக் கருள் தருவேன்
என்னிடம் தங்குவாய்.

5 உனக்காய் ஜீவன் நான் விட்டேன்;
எனக்காய் என் செய்தாய்;
உனக்காய் உயிர்த்தெழுந்தேன்
எனக்காய் ஜீவிப்பாய்.

---

## 17

### "Christian" Faith, Life, Work

இராகம் :— ஜெயக் கிரீடம், ஜெயக் கிரீடம் or
நான் நம்புவேன், நான் நம்புவேன்.

1 மீட்பர் சென்ற பாதையே,
இப்போதும் நான் செல்வேன்;
சிலுவை சுமந்தால் தான்
பொற் கிரீடம் பெறுவேன்.---

2 யேசு தொங்கி மரித்தார்,
என் பாவம் நீக்கவே;
குழியில் சென்று எழுந்தார்,
மரணம் ஜெயமே.---

3 மீட்பர் ரத்தம் நான் பார்த்தேன்,
என் பாவம் நீக்கிற்றே;
சாபம் நாசம் வேறில்லை,
இதென் விஸ்வாசமே.

4 ஸ்நானத்தால் விஸ்வாசத்தை
அறிக்கை செய்யவே,
மீட்பர்தான் மேலேகையில்
அன்பாய்க் கற்பித்தாரே.

5 மீட்பருடன் மரித்தேன்
முச்சத்ரு மரித்தார்;
இம் மூவரிடம் பங்கில்லை,
அவரென் பங்காளர்.

6 மீட்பரில் நானெழுந்தேன்,
அவரென் ஜீவனே;
சுத்தனாய் நான் ஜீவிக்க
அவரென் பெலனே.

7 வல்ல தேவ ஆவியே,
இப்போதென் நெஞ்சிலே
வந்து சீஷன் காத்திடும்,
“ யேசுவின் மார்பிலே.”

8 லோக ஞானம் சிறுது,
ஏசு என் தஞ்சமே;
ரத்தம் சிந்திக் கொண்டோரே,
என்னைக் கை விடாரே.

9 சத்திய சாட்சி அவர்க்காய்
அவரால் நான் நிற்பேன்;
இங்கென் வேலை ஆனபின்
அங்கென்றும் போற்றுவேன்.

10 மீட்ப ருதிர வல்லமை
நீ வந்து சோதியேன்;
பாவம், பயம், தண்டனை
விட்டோடும் ருசியேன்.

“அவருடைய சித்தத்தின்படி செய்ய மனதுள்ளவ னெவனோ அவன் இந்த உபதேசம் தேவனால் உண் டாயிருக்கிறதோ, நான் சுயமாய்ப் பேசுகிறேனோ என்று அறிந்து கொள்வான். யோ. 7: 17.

மாற்கு 16: 16. யோவான் 14: 15; 8: 31, 32; 15: 27.

## 18

### *Ye are not your own, for ye are bought with a price.*
### *1 Cor. 6: 19, 20*

9, 6, 9, 6

1 ரத்தத்தால் என்னை மீட்டுக் கொண்டார்
அவர்க்காய் ஜீவிப்பேன்
கிருபையால் என்னை ஆட்கொண்டார்
அவரைப் பின் செல்வேன்.

*Ch.* ஒ நீங்க ளுங்களுடைய வர்களல்ல
என்று அறியீர்களா
ஆகையால் யேசுவால் (ரத்தத்தால்) கொள்ளப்பட்ட
ஆவி சரீரத்தினால்
என்றும் மகிமை ஏற்றுமேன்.

2 சுத்தஆவி எனக்கு தந்தார்
அவரால் நான் நிற்பேன்
சுத்தனுக்கியே காத்துக் கொள்வார்
அவரைப் போற்றுவேன்.

3 என் க்ரியை நோக்கம் இவ்வுலகில்
யேசின் மகிமையே
என்தன் பார்வை பேச்சு உடையில்
யேசுவைக் காட்டவே.

4 தேவாவியே இப்போது என்னை
ஏசுவோடே ஒட்டும்
என்தன் ஆவி தேகம் ஜீவனை
தெய்வீகம் ஆக்கிடும்.

5 ஓர் பிரிய பாவம் உள்ளத்தில்
ஓர் தீய நோக்கமே
பேரின்பம் நீக்கும் கிறிஸ்துவில்
ஆவிக்கும் துக்கமே.

6 திரியேகா இப்போ முற்றுமாய்
அடியேன் ஆண்டிடும்
ஆவி, ஆத்மா, தேகம் பலியாய்
முடிய காத்திடும்.

---

## 19

Tune: *"I need thee oh? I need thee"*

7, 6, 7, 4

1 பிதாவே ஆவி ஊற்றும்
என்னுள்ளத்தில் ஊற்றும்
உம் வாஞ்சைகினி மூட்டும்
வாக்கதுவே.

2 ஒளியே இருள் நீக்கும்
பாவத்திரள் நீக்கும்
என் மாம்சக் கறை போக்கும்
மெய்த் தீபமே.

3 இரட்சகா! எங்கும் யுத்தம்
சாகு மட்டும் யுத்தம்
தந்தேனே முழு தத்தம்
ஆண்டிடுமே.

4 ஓ! தேவை? என்றும் தேவை
உம் சமுகம் தேவை
நான் முற்றும் வெல்ல சாவை
ஜெயித் தானே.

5 நீர் காரும்! தேவா! காரும்
கண்மணிபோல் காரும்
உம் உள்ளங்கையில் பாரும்
திக்கற்றோனே.

6 உம் ரத்தம் சிந்திக்கொண்டீர்
ஆவி தந்து காப்பீர்
பேரின்பக் கரை சேர்ப்பீர்
இம் மானு வேல்.

---

## 20

8: 7, 8, 7

1 ரத்தம் கண்டும்மண்டை வந்தேன்;
சுத்தம் என்னைச் செய்கிறீர்;
பத்தனுக முற்றும் தந்தேன்;
சித்தம் நிறை வேற்றுறீர்.

*Ch.* ஸ்தோத்திரம், ஸ்தோத்திரம், அல்லலூயா,
ஸ்தோத்திரம்யேசு நாதரே.
ரட்சித்தென்னை ஏற்றுக்கொண்டீர்;
ஸ்தோத்திரம், ஸ்தோத்திரம், யேசுவே.

2 உந்தன் சாயல் என்னில் காண
வந்து நீர் பிரகாசியும்;
எந்தன் உள்ளம் உம் வீடாக
என்றும் சொந்தமாக்கிடும்.

3 சத்ய சாட்சி உமக்காக
நித்தம் கூறச் செய்திடும்;
நித்தியானந்தம் எனக்காக
ரத்தத்தால் கடாட்சியும்.

4 ஆவி ஆத்மா தேகம் யாவும்
பாவ மின்றிக் காத்திடும்;
"சாவின்" மூலம் இன்பம் யாவும்
பாவி ஏழைக் கீந்திடும்.

---

## 21

7, 4

1 மீட்பர் ரத்தம் கண்டோரே
போற்றுங்களேன்.
மீட்பின் பாதை செல்வோரே
போற்றுங்களேன்.

*Ch.* போற்றுவேன், நான் மீட்படைந்தேன்;
யேசுவை என்றும் போற்றுவேன்;
போற்றுவேன், நான் மீட்படைந்தேன்;
என்றென்றும் போற்றுவேன்.

2 யேசு நேசர் துணையாம் போற்றுங்களேன்
விஸ்வாசத்தால் ஜெயமாம் ,,

3 சுத்த ஆவி பெற்றோரே ,,
நித்ய ஜீவன் சேர்வோரே ,,

4 யேசு நாமம் திருக்கமாம் ,,
நாசமொன்றணுகாதாம் ,,

5 துன்பம் துக்கம் இம்மையாம் ,,
இன்பம் சுகம் அங்கேயாம் ,,

---

## 22

*They that wait upon the Lord shall renew their strength. Is. 40. 31*

9, 6, 9, 6

"Ho, reapers in the whitened harvest"

1 கனி சேர்க்கும் சொற்ப ஊழியரே!
ஏன் தோய்ந்து சோருவீர்?
வாரும்! கர்த்தர் பாதம் காத்திடும்,
புது பெலன் கொள்வீர்.

*Ch.* கர்த்தருக்குக் காத்திருப்போர்
மேல் பெலன் கொள்வார்;
கழுகுகளைப்போல்,
கழுகுகளைப்போல் மேல் எழும்புவார்.
ஓடினாலும், இளைப்புறார் நடப்பார் சோர்வில்லை
Repeat.

2 அதைரியம் சோர்வுமிக அடைந்து
வியாகுல ஜெபமேன்?
ஜீவனுள்ள யேசை நம்பினோர்,
தளரக் காரணமேன்?

3 களி கூர்! நான் உன்னுடன் கூட
இருப்பேன் சா மட்டும்;
மேல் நோக்கு! திடன்கொள், முன்செல்ல
வேண்டும், க்ருபை வரும்.

---

## 23

### *All the day long*

12, 9, 12, 10

1 தூக்கிப்போம் தயவாய் ஏசு என் ரக்ஷகா!
வல்லகரம் கட்டியே தாங்கிடும்;
தூக்கியே என் ஜீவிய அலைகள் மேலே
'ருக்கமாய் கொண்டுபோம் இன்றுமென்றும்

*Ch.* இன்றுமென்றும், இன்றுமென்றும்
என் ஆவி தேற்றி சங்கீதம் தாரும்!
தூக்கிப்போம், என் ஜீவ காலமெல்லாம்
அன்பாய் உருக்கமாய் இன்றுமென்றும்.

2 நேசமாய்ப் பேசுமேன் யேசு என் ரக்ஷகா
நொந்த என் நெஞ்சகத்தில் ஊதிடும்
தாறுமே உந்தன் மகிமைப் பிரகாசத்தை
அப்போ எந்தன் பயம் விட்டோடிடும்.

3 நேசமாய்ப் பேசுமென் யேசு என் ரட்சகா;
வீணையில் மாஇன்பம் உம் சத்தமே;
நீரே புகலிடம் என் ஆத்ம மீட்பரே;
என் பங்கு, என் ஜீவன், என் எல்லாமே.

4 தூக்கி உருக்கமாய் இருள் பள்ளத்தாக்கிலே
கொண்டுபோம் ஜீவனுக்கக்கரையே
அப்போ என் யுத்தம் என் துன்பம் முடிந்திடும்;
அப்போ உம்முடன் நான் தங்குவேனே.

---

## 24

10, 9, 13, 9

யேசு மாட்டுக் கொட்டிலில் பிறந்தார்;
அப்போ மேய்ப்பர்கள் வந்தார் பார்க்க
அவர்க்குத் தூதர் சொன்னார் ரட்சகர் பிறந்தார்
ஏழைப்பாவி என்னை ரட்சிக்க.

*Ch.* ஏழைப்பாவியை, ஏழைப்பாவியை
ஏழைப்பாவி என்னை ரட்சிக்க;
தூதர் மேய்ப்பருக்குச் சொன்னார் ரட்சகர் பிற [ந்தார்
ஏழைப்பாவி என்னை ரட்சிக்க.

2 அவர் காயங்கள் என் மீறுதல்காய்
கஸ்தியுற்றார் என் துயர் பார்க்க;
காவினில் ஜெபித்தார், இரத்தவேர்வை யிட்டார்
ஏழைப்பாவி என்னை ரட்சிக்க.

3 பிலாத்தின் முன் அவர் நிறுத்தப்பட்டார்;
தீர்ப்புப் பெற்றார் மரத்தில் தொங்க;
எல்லாம் முடிந்ததுஎன்றார்,கூவி ஜீவன்விட்டார்;
ஏழைப் பாவி என்னை ரட்சிக்க.

4 மரணத்தின் வலிமைதான் வீணே;
அதை ஜெயித்தார்; அவரால் நான் வெல்ல
மூன்றும் நாள் எழுந்தார் பகைஞரோ வெட்கி
ஏழைப்பாவி என்னை ரட்சிக்க. [னார்;

5 மோட்சம் சேர வல்யுத்தம் செய்கிறேன்;
மரணம் மேல் ஜெயம் அவர் தருவார்;
மகிமைக்குப்பறப்பேன், ஏகையில் எக்களிப்பேன்;
ஏழைப்பாவி என்னை ரட்சித்தார்.

---

## 25

13' s

*Ch.* எனக்காய் { ஓடுதய்யோ / ஓடுது பார்
இயேசுவினின்று இலவச மீட்பிதோ.

1 இரத்த வேர்வைத்துளி கெத்சமெனேயிலே
2 முள்முடி அழுத்தி முகமெல்லாம் தாரையாய்
3 கைகாலிலிருந்து கஸ்திவேர்வையுடனே
4 ஈட்டியாலே குத்தி, குருதி விலாவிலே
5 பரலோக பாக்கியம் பட்சமாய் ஈந்திட

## 26

### Tune: *In the Sweet*

9' s

1 கொடும் பாவங்கள் மன்னித்தவர்,
குறைகள் நீக்க வல்லரல்லோ;
மரணத்தினின் றெடுத்தவர்;
மன சஞ்சலம் நீக்கிடாரோ.

*Ch.* நம்புவேன், தருவார், பெறுவோம்;
இன்றைமட் டெம்மைக் காத்தாரல்லோ;
நம்புவேன், தருவார், பெறுவோம்;
ரத்தத்தால் எமை மீட்டாரல்லோ.

2 குமாரனைத் தந்தென்னை மீட்டவர்
"கொடுப்பேன் கேள் என் நாமத்தாலே
வேண்டும் நன்மை யாவும்" என்றவர்
தூண்டும் ஆவியால் செப்பினரே.

3 என் பிதா எந்தன் தேவையெல்லாம்
ஏசுவின் மூலம் ஈந்திடுவார்;
துன்பம் கஷ்டம் கவலையெல்லாம்
அன்புடன் அவர் நீக்கிடுவார்.

4 ஆத்துமா தேகம் ஆவியோடும்
ஆளும் கர்த்தரைப் போற்றுவோமே.
பிதா சுதன் பரிசுத்தாவிக்கும்
பிரீதிஸ்தோத்திரம் எந்நாளுமே.

## 27

Tune: *At thy feet I fall*

6's

1 என் ஆவி தொய்யுதே
என் ஆத்மா தியங்குதே
அக்கினி வெள்ளமே
என்மேல் புரளுதே.

*Ch.* பாதம் பணிகிறேன்
ஏழை கெஞ்சுகிறேன்
வியாகுலம் நீக்குமேன்
உம் வாக்கை நான் விடேன்.

2 என் முகம் மறைப்பீர்,
என் விண்ணப்பம் கேளீர்,
யேசின் ரத்தம் வீணோ,
என்றைக்கும் தள்வீரோ.

3 இதோ நான் உன்னுடனே
இருப்பேன் என்றீரே
தாங்கும் புசலிலே
என் புகலிடமே.

4 யாக்கோபின் தேவனே
போராடச் சொன்னீரே
ஏசின் நாமத்திலே
கேளும் என் கேசையே.

## 28

Tune: *At thy feet I fall.*

6' s

1 புசலடிக்குதே
கடலும் கோஷ்டமே
வெள்ளம் பெருகுதே
வள்ளம் தத்தளிக்குதே.

*Ch.* நான் தான் வீண் பயமேன்
பிள்ளை திடன் கொள்ளேன்
சஞ்சலம் வேண்டாமே
நான் புகலிடமே.

2 ஏன் நிலை மோசமே
விடவும் பயமே
உம் மண்டை சேரவே
ஆத்மா வாஞ்சிக்குதே.

3 வா என்று சொன்னீரே
வந்தான் பேதுருவுமே
அற்ப விஸ்வாசமே
அமிழச் செய்ததே.

4 சந்தேக பயத்தால்
அமிழ் வேளைகையால்
படவில் ஏறமேன்
அமர்ந்து சுகிப்பேன்.

## 29

Tune: *Lord, I hear of showers*

8, 7

1 "நான் உன்னைப் பிரியேன் ஓர்காலும்"
இவ்வார்த்தை நம்பிப்பற்றேன்
உன் குறை என்னை நொந்தாலும்
நான் ஓர்காலும் கைவிடேன்.

2 நான் ஓர்காலும் விலகேனே
உனக்காய் ஜீவன் தந்தேன்
என்னை உன் உள் நெஞ்சிலேயே
ஏற்றதை நான் அறிவேன்.

3 சோதனைகள் தாங்கும்போது
'கேடகம்' — நிலை நிற்பேன்
என் பரிதாபம் குறையாது
நம்பி சோதித்தறியேன்.

4 புசல்கள் மோதும் உன் மேலே
பாதையும் இருளாகும்
'கைவிட்டார்' என்று சொல்லாதே
பார் நானே உன் சமீபம்.

---

## 30

*The lamb of God which taketh away the sin of the world — Jno. 1. 29.*

7, 6

1 ஏசுமேல் போட்டேன் பாவம்
தேவாட்டுக் குட்டியே
சுமந்தெமை மீட்டாராம்
சாபத்தின் கீழ் நின்றே,
ரத்தமென் குற்றம் நீக்கி
கழுவ நான் வாரேன்
கறைகள் யாவும் போக்கி
மாவெண்மை யாகுவேன்.

2 ஏசுமேல் போட்டேன் "தேவை"
சம்பூர்ணம் அவரே
குணம் செய்வார் நோய்களை
என் ஆத்மா மீட்டாரே
என் சஞ்சலங்கள் பாரம்
கவலைகள் ஏற்பார்
இவைகள் நீக்கி துக்கம்
பகிர்ந்து கொள்ளுவார்.

3 வைத்தேன் என் ஆத்மா ஏசில்
தவித்த ஆத்மாவே
அணைத்துக்கொண்டார் கையில்
அவர் மார் சாயவே
இம்மான்வேல், கிறிஸ்து, ஏசு,
இந்நாமம் பேரின்பம்
சுகந்தம் போல் வீசுது
என் நேசர் பேர் எங்கும்.

4 நான் யேசுவைப் போலாக
அன்பு, தாழ்மை, சாந்தம்;
தேவ புத்திரன் ஆக
ஆசை ஏசின் குணம்
என் வாஞ்சை ஏசுவுடன்
விண்ணோர் கூட்டம் சேர
துதிக்கும் தூதருடன்
போற்றிக் கீதம்பாட.

---

## 31

*"What a friend we have in Jesus"*
*A friend that sticketh closer than a brother. Pro. 18:24*

8, 7

1 ஏசு என்ன அதிசய நேசன்
பாவம் துயர் சுமக்க;
என்ன சிலாக்யம் தேவனிடம்
ஏதும் ஜெபத்தில் சொல்ல;
என்ன ஆறுதல் இழக்கிறோம்,
ஓ என்ன வீணேவுதான்
இதெல்லாம் எனது ஜெபத்தில்
பிதாவண்டை சொல்லாமல்தான்.

2 கஷ்டம் சோதனைகள் உண்டா?
துன்பங்கள் எங்கே உண்டோ?
அதைரியம் ஓர்காலும், வேண்டாம்
ஜெபத்திலே கொண்டுபோ

இவ்வுத்தம நேசர் உண்டோ!
துன்பமெல்லாம் தாங்குவார்;
ஜெபத்திலுன் குறை சொல்லு,
ஏசு எல்லாம் அறிவார்.

3 பாரம் மிகுத்துத் தளர்ந்து
ஆத்மா நொந்து போனதோ?
அருமை ரட்சகர் தஞ்சம்,
அவரண்டை கொண்டு போ.
இஷ்டர் இகழ்ந்து கைவிட்டால்
இன்னும் கெதி ஏசுவே,
தம் கரம்வைத் துன்னைக் காப்பார்,
அங்கே மெய் ஆறுதலே.

---

## 32

*My all is on the altar — Living Sacrifice*

7. 6

1 என் ஆத்மா, ஆவி, தேகம்,
ஏசுவே நான் தாரேன்,
உமக்கே ஏழை தத்தம்,
நீர் ஏற்றுக்கொள்ளுமேன்;
'சர்வாங்கம்' பீடம் வைத்தேன்,
தேவா நான் உம் சொந்தம்;
தாங்கும் அப்போ தள்ளாடேன்
நீரே ஆண்டு கொள்ளும்.

2 ஏசுவே வல்ல மீட்பர்.
உம் நாமம் நம்பினேன்;
உம் ரட்சண்யம் என் ஆவல்,
உம் வாக்கை நான் விடேன்;
நான் பாவத்துக்கு செத்தேன்,
என்னை நீர் ஆட்கொள்ளும்;
போராட்டம் ஜெயத்திற்கும்
ஆயத்தமாய்க் கொள்ளும்.

3 இத்தத்தம் என்ன இன்பம்,
உம்மால் ஜீவிக்கவே;
தேவமைந்தா நீர் என்னில்
உம் ஜீவ்யம் காட்டுமே.
ஏசுவே நான் உம் சொந்தம்
இரத்தம் கழுவிற்றே;
பெற்றேன் சுத்தாவி தீட்சை
உமக்கு பலியே.

---

## 33

Tune: *I am comimg to the cross*

7's

1 சிலுவையண்டை வாரேன்
ஏழை முடம் குருடனே,
எல்லாம் குப்பை தீர்க்கிறேன்
பூர்ண மீட்பு வேண்டுமே.

*Ch.* உம்மண்டை நான் வாரேனே
என் கல்வாரி பலியே!
உம்பாதம் பணிகிறேன்
ஏசுவே ரட்சியுமேன்.

2 உமக்காய்த் தவிக்கிறேன்
தீமை என்னில் ஆளுதே;
ஏசின் வார்த்தை கேட்கிறேன்,
"சுத்தம் செய்கிறேன் உன்னையே"

3 சர்வாங்கம் நான் உமக்கே
நேசர், நேரம் ,ஆஸ்தியும்
ஆவி, ஆத்மா, தேகமே,
முற்றும் சொந்தம் எந்நாளும்.

4 வாக்கில் நம்பி நிற்கிறேன்,
ரத்தம் பூசுகிறீரே,
மௌனமாய்க் கிடக்கிறேன்,
கிறிஸ்துடன் மரித்தேனே.

5 யேசு வாரார் உள்ளத்தில்,
அவரில் பூரிப்பேனே,
சமூலமும் சுத்தம் என்னில்
ஸ்தோத்ரம் புகழ் அவர்க்கே.

---

## 34

Tune: *Guide me. oh thou Jehovah*

8. 7

1 நடத்தும் ஓ மா யேகோவா
பரதேசி வனாந்தரமே
பெலவீனன் நீர் வல்லவர்
உம் புயத்தால் தாங்குமே
வான அப்பம் குறைவின்றி போஷியும்.

2 திறவும் உம் திவ்ய ஊற்றை,
பாயும் ஜலம் என் சொஸ்தம்,
தீப ரூப மேகஸ்தம்பம்
என்னை வழி காட்டட்டும்
வல்ல மீட்பா, இன்னும் என்னைக் காத்திடும்.

3 நான் யோர்தானைக் கடக்கையில்
தொல்லை பயம் நீக்கிடும்;
தாங்கி, பொங்கும் வெள்ளத்தின் மேல்
கானான் கரை சேர்த்திடும்;
துதி ஸ்தோத்ரம் உமக்கென்றும் ஏற்றுமே.

---

## 35

*Yield not to temptation*

11's

1 தீய ஏவல் தள்ளு, இசைதல் பாவம்
ஓர் ஜெயமே தரும் இன்னும் மேல் ஜெயம்
எதிர்த்துப் போராடு, நீக்கு துர் இச்சை
யேசு என்றும் நோக்கு, ஈவார் ஜெயத்தை

Ch. இரட்சகரை நீ கேளு,
ஆற்றித் தேற்றியே காப்பார்,
அவர் பிரீதியும் அது
உன் ஜெயம் தருவார்.

2 துஷ்டத் தோழர் சேராய், கெட்ட சொல் எண்ணாய்
தே நாமம் கனம் செய், வீணிலும் எடாய்;
உள். அன்பு, நல் ஊக்கம், உண்மையும் தேவை;
யேசு என்றும் நோக்கு, ஈவார் ஜெயத்தை.

3. ஜெயிப்போர்க்கு தேவன் க்ரீடம் ஈவாரே,
தளர்ந்தாலும் ஜெய்ப்போம் விஸ்வாசத்தாலே
மீட்பர் புதுப்பிப்பார், பெலன் நம்பிக்கை
யேசு என்றும் நோக்கு, ஈவார் ஜெயத்தை.

---

## 36

*Jesus, I my cross have taken*

8, 7

1 யேசு என் சிலுவை எடுத்தேன்,
எல்லாம் விட்டுப் பின் செல்ல;
ஏழை நிர்ப்பந்தன் நான் வந்தேன்,
நீரே எல்லாம் வேறல்ல;
போகட்டும் பூலோக மேன்மை,
பெற்றூர் கல்வி பணமே;
என்றாலும், என் ஸ்திதி மேன்மை,
தேவன் மோட்சம் சொந்தமே.

2 லோகம் இகழ்ந்து பகைக்கும்,
மீட்பரையும் செய்தாரே
மனுஷன் தன்மை வஞ்சிக்கும்,
அவர் போல் நீரல்லவே;
தேவன் அன்பு சர்வஞானம்
என் மேல் களிக்கும் போதே
மற்றோர் செய்வார் ஆகடியம்,
முகம் காட்டும் சுகமே.

---

**37**

Tune: *I feel like singing*

8, 6

ஓய்வின்றிப் பாட ஆவலே,
என் கண்ணீர் மாறிற்றே;
ஆம், யேசு பிராண நேசனே,
சேவிப்பேன் தினமே.

*Ch.* என் ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம்,
ஸ்தோத்ரம் அவர்க்கே;
ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம்,
எந்நாளும் அவர்க்கே.

2 சிலுவை மேல் கர்த்தர் கண்டேன்;
என் பாவ வேலையே
முன் மனம் நொந்து அழுதேன்,
இப்போ சங்கீதமே.

3 சோதனை என்னை நெருக்கில்,
என் கீதம் யேசுவே;
கண்ணீர் ஓர்வேளை உண்டாகில்
யேசு என் கீதமே.

4 தேவாட்டுக் குட்டி சரிதை
உன் நா பேசட்டுமே!
யாவரும் இந் நற்செய்தியை
கேட்டுப் பாடட்டுமே.

---

## 38

*Blessed be the fountain*

8's

1 வாழ்க, கல்வாரியின் ஊற்றே,
பாவிக்காய் திறக்கப்பட்டீர்;
வாழ்க, தேவனின் சுதனே,
தளிம்பால் சுகமாக்கினீர்;
உம்மை விட்டலைந்ததாலே,
என் ரணத்தால் கஸ்திபட்டேன்;
தோ ரத்தத்தில் கழுவுமே,
பஞ்சிலும் வெண்மை யாகுவேன்.

*Ch.* பஞ்சிலும் வெண்மை,
வெண்மை யாக்குது;
யேசுவின் திரு ரத்தத்தால்
என் உள்ளம் வெண்மையாயிற்று.

2 முட் கிரீடம் தலையால் ஏற்றீர்,
குருசின் கஸ்தி வென்றீரே,
துன்பம் துயரம் சகித்தீர்,
உம் பாடெல்லாம் வீணல்லவே,
உம் திவ்விய ஊற்றண்டை வந்தே
கறைபோக்க ஆசிக்கிறேன்.
'தோ ரத்தத்தில் கழுவுமே
பஞ்சிலும் வெண்மை யாகுவேன்.

3 பிதாவே, உம்மை விட்டலைந்து,
துரோகங்கள் மிகச் செய்தேனே;
பாவம் ஸ்வேறெனக் காணுது,
தண்ணீர் கழுவ மாட்டாதே;
யேசுவே உம் ஊற்றண்டைக்கே
உம் வாக்கில் சாய்ந்து வாரேன்;
திவ்விய முழுக்கால் கழுவுமே,
பஞ்சிலும் வெண்மை யாகுவேன்.

---

## 39

Tune: *Are you washed in the blood*

11, 9

1 சுத்தமாக யேசுவண்டை வந்தாயா?
இரத்தத்தில் கழுவப் பட்டாயா?
முற்றும் அவரில் நீ நம்புகிறாயா?
இரத்தத்தில் கழுவப் பட்டாயா?

*Ch.* யேசுவின்......ரத்தத்தில்.........
உன் உள்ளம் நீ கழுவினுயா ?
மாசெல்லாம் நீங்கிற்ரு?
பஞ்சைப்போல் வெண்மையா ?
இரத்தத்தில் கழுவப்பட்டாயா ?

2 ரட்சகருடன் சஞ்சரிக்கிருயா ?
இரத்தத்தில் கழுவப்பட்டாயா ?
அவரில் விடாமல் நிலை நிற்கிருயா ?
இரத்தத்தில் கழுவப்பட்டாயா ?

3 மணவாளன் வர அங்கி வெண்மையா ?
மாசறக் கழுவப்பட்டாயா ?
உன் ஆத்மா பொன்னகருக்கு ஆயத்தமா ?
இரத்தத்தில் கழுவப்பட்டாயா ?

4 கறைப்பட்ட கந்தைகளை நீக்கியே
இரத்தத்தில் நீ கழுவப்படேன்
இதோ பாவம் போக்கும் நதி ஓடுதே
இரத்தில் நீ கழுவப்படேன்.

---

## 40

### *Gad is Love*

8, 7

1 'தேவன் அன்பு'—தேவ வார்த்தை
தினமும் ருசிக்கிறேமே;
வானம் பூமி விளம்புதே
'தேவன் அன்பு' என்றமே.

Ch. அல்லேலூயா! எங்கும் பாடும்,
தூதர் சேனை பாடுது.
விண்ணிலே கெம்பீரமாயே
'தேவன் மின் தேவன் அன்பு'.

2 'தேவன் அன்பு' நன்றாய்க்கூறு,
மீட்பர் வந்த செய்தியை;
கெட்டலைந்தேன், தேடி மீட்க
காட்டிய பிதா அன்பை.

3 'தேவன் அன்பு' க்ருபைக்கடல்
ருசிப்போமே பேரன்பு
கூறுவோம் நாம் பாவிகட்கு
'தேவன் மின் தேவ அன்பு'

---

## 41

### *Jesus Saviour, pilot me*

7's

1 யேசு மீட்பா நடத்தும்,
கடல் காற்றால் மும்முரம்
அலைகள் சுருளுது,
பாரை திட்டு மூடுது,
நீரே பாதை திசையும்,
யேசு மீட்பா நடத்தும்.

2 தாய் தன் பிள்ளை அமர்த்தும்
போல் இக் கோஷ்டம் அடக்கும்;

புசல் உம் சித்தம் அடங்கும்,
சொல்லுவீர் "அமர்ந்திரும்,"
கடல் ராஜன் அற்புதம்
யேசு மீட்பா நடத்தும்.

3 கரை கிட்டிச் சேரையில்,
அலைபொங்கி மோதையில்,
பேரின்பம் பெறும் முன்னே,
சாய்ந்திருக்க மார்பிலே,
என்னிடம் நீர் சொல்லுமேன்
பயம் வேண்டாம், உள் சேர்ப்பேன்.

---

## 42

### *Simply Trusting*

7's

1 நம்புவேன், நான் நித்தமும்,
அகோர புசலிலும்,
விஸ்வாசம் தோய்ந்தாலுமே,
யேசு நம்ப சுகமே.

*Ch.* நிமிஷம் தோறும் நம்புவேன்,
ஒவ்வோர் நாளாய் நம்புவேன்,
என்ன நேரிட்டாலுமே,
யேசு நம்ப சுகமே.

2 தேவாவி இலங்குதே,
ஏழை எந்தன் நெஞ்சிலே,
அவர் நடத்த விழேனே,
யேசு நம்ப சுகமே.

3 சுக காலம் பாடுவேன்,
துன்ப நாளில் ஜெயிப்பேன்,
ஆபத்திலும் யேசுவே,
யேசு நம்ப சுகமே.

4 தங்கும் காலம் நம்புவேன்,
அந்தம் மட்டும் நம்புவேன்,
மோட்சத்துள் போமட்டுமே,
யேசு நம்ப சுகமே.

---

## 43

Tune: "*Jesus loves me*"

7's

1 யேசு என்னில் நேசமே,
தேவன் வார்த்தை சொல்லுதே;
பாலர் அவர்க்கு சொந்தம்
நேசர் தாம் அவர் பெலம்.

*Ch.* நான் யேசு சொந்தம்,
நான் யேசு சொந்தம்,
யேசு என் சொந்தம்,
தேவனின் வார்த்தையே.

2 யேசு என்னில் நேசமே,
சாவால் மோட்சம் திறந்தாரே;
என் பாவம் கழுவுவார்,
உள்ளே ஏற்றுக் கொள்ளுவார்.

3 யேசு என்னில் நேசமே,
வழியெல்லாம் கூடவே,
அவரை நான் நேசிக்கில்
வீடு சேர்ப்பார் சாகையில்.

---

## 44

### *Behold what love*

8, 6

பாரும், அன்பு; ஓ, பேரன்பு,
பிதா நம்மேல் வைத்தார்.
பாவிகளான நாமுமே,
ஆனோம் தேவ புத்ரர்.

*Ch.* இதோ......பிதா நம் மீதில்,
பிதா நம்மீதில் வைத்த பேரன்பு எவ்-வ-ள-வு,
நாமும்......நாமும் தேவனின்...
தேவனின் புத்ரராக.

2 அந்நியரல்லவே இப்போ
ரத்தத்தால் சம்பந்தம்.
நேசரில் தேவப் பிரியரே
தேவனுக்குச் சொந்தம்.

3 மகிமையில் எவ்விதமோ
இன்னும் தோன்றவில்லை;
ஆனால் நம் கர்த்தர் பார்க்கையில்
அணிவோம் சாயலை.

4 இவ்வித நம்பிக்கையால் தான்
பரிசுத்த ராவோம்
உயிர்த்த மகிமைக் கர்த்தர்
பார்த்தவர் போலாவோம்.

---

## 45

*"O Christ in Thee"*

8 '6

ஓ, ஏசுவே, உம்மிலே தான்
என் மெய்ப் பாக்யம் கண்டேன் ;
பெற்ற சமாதானம் இன்பம்;
முன்னே நான் அறியேன்.

*Ch.* இப்போ நீரே யல்லாமலே
வேறொன்று மல்லவே;
அன்பு ஜீவன் பேரின்பமே
உம்மில் தான் கண்டேனே.

2 நீரில்லாமல் மெய் சந்தோஷம்
அடைய ஆசித்தேன்;
ஆனல் உம் பக்கம் போகையில்
அன்பால் பிடிபட்டேன்.

3 'வெடிப்புள்ள தொட்டிகளே'
நம்பி மோசம் போனேன்,
தாகம் தீராத தாலேதான்
வெட்கியே துக்கித்தேன்.

4 அற்ப வாழ்வுக்காய் அழுதேன்
உமக் காயல்லவே;
கிருபை என் கண் திறக்கவே
உம்மாட்சி கண்டேனே.

---

## 46

8, 7

1 யேசு என் வழி நடத்த
வேறு ஏதும் வேண்டுமோ?
சென்றநாள் க்ருபையால் ஆண்ட
அவரில் சந்தேகமோ?
தேவ சமாதானம் ஆறுதல்
இங்கவரில் தங்கவே
என்ன நேரிட்டாலும் ஸ்தோத்திரம்
யேசின் செயல் நன்மையே!

2 யேசு என் வழி நடத்தி
சுழலிலும் தேற்றுரூர்;
சோதனையில் க்ருபை தந்து
ஜீவாப்பம் போஷிக்கிறார்;
என் அடி தள்ளாடினாலும்,
என் ஆத்மா தவிக்கினும்,
பொங்குதே சந்தோஷ ஊற்று
இதோ கன் மலை நின்றும்.

3 யேசு என் வழி நடத்த
என்ன பூர்ண பேரன்பு

வாக்கு சம்பூர்ண ஆறுதல்
என் பிதா வீட்டில் உண்டு;
என் ஆத்மா சாவாமை போர்த்து
இலங்கும் ராஜ்யம் சேரச்சே;
இதே எந்தன் நித்திய கீதம்
" வழி யெல்லாம் யேசுவே".

---

**47**

*Not my own*

8, 7

1 " நான் என் சொந்தமல்ல " —யேசு
ரத்தத்தால் ரட்சித்தாரே;
என்ன சந்தோஷம் இச்செய்தி
நானும் ஏசு சொந்தமே.

*Ch* நானே, எந்தன் சொந்தமல்ல,
மீட்பா! நான் உம் சொந்தமே,
எனக்குள்ள தெல்லாமுமே,
இன்றும் என்றும் உமக்கே.

2 நான் என் சொந்தமல்ல—கிறிஸ்து
தான் என் ஆத்மா நம்பிக்கை
சமூலமும் ஒப்புவித்தேன்
என்றும் அவர்க்குடைமை.

3 நான் என் சொந்தமல்ல—எந்தன்
ஜீவன் சுகம் பலியே
உற்சாக ஊழியம் செய்ய
" ராஜாவின் மகிமைக்கே"

4 நான் என் சொந்தமல்ல-யேசு
மீண்டோர் கூட்டம் சேர்த்திட்டார்;
அங்கவர் மகிமை பார்க்க
என்னை சொந்தமாக்கினார்.

---

## 48

*In God I have found a retreat*

8

1 தேவனில் மறைவிடமே
சுகமாய் அங்கே தங்குவேன்;
நிகரில்லா ஆறுதலே
இங்கேயே தான் நான் சுகிப்பேன்.

*Ch* ஓ. இதென்ன பேராற்தல்
நெஞ்சில்! பாடச்சே!
அணுகா எத்தீங்கும்
அவர் நிழலிலே.

2 இரவு பயங்கள் அஞ்சேன்,
பகல் அம்பு தீமை ஏது?
அவர் செட்டையால் மூடப்பட்டேன்
திகில்களெல்லாம் ஓடுது.

3 இருளில் கொள்ளை நோய்கள் தான்
எப்பக்கமும் சூழ்ந்த போதும்,
தேவசக்தி சமுகம் நான்
சந்தேகியேன் ஒரு போதும்.

4 மத்யானம் பாழ் சங்காரமும்
மோசங்கள் திகில் கொடாதே;
இன்ப ஐக்யம் யேசும் நானும்
அவர் மீட்பு நான் பாடவே;

5 ஆயிரம் என் பக்கம் வீழ்வார்,
கோடி வலப்பக்கத்திலும்,
என் மேல் தம் செட்டை விரிக்ருர்,
அதின் கீழே சுகம் நானும்.

---

## 49

### *The Lord is my shepherd. Ps. 23.*

7's

1 கர்த்தரே என் நல் மேய்ப்பர்,
தாழ்ச்சியே அடையேனே,
பசும் புல்லில் மேய்த்தவர்,
அமர்ந்த தண்ணீரண்டையே
கொண்டுபோய் விட்டுப் பின்னும்,
எந்தன் ஆத்துமா தேற்றுருர்,
தம் நாமம் நிமித்தமும்
நீதியில் நடத்துருர்.

*Ch.* நல் மேய்ப்பரே etc. etc.
நீரே எந்தன் கெதியே,
முற்றும் காத்துக் கொள்ளுமே.

2 மாரண இருள் ஆழத்தில்
நடந்தாலும் தீமைக்கே
பயப்படேன்; இருளில்

என்னுடனே கூடவே
தேவரீர் நீர் தங்கியே
அன்பின் கோல் தடியாலும்
ஆதரித்துத் தேற்றியே
காக்கிறீர் நீர் முற்றிலும்.

3 சத்துருக்கள் முன்பிலும்
சந்தோஷம் தருகிறீர்.
க்ருபையால் ஏழையையும்
அபிஷேகம் செய்கிறீர்.
எந்தன் பாத்ரம் நிரம்பியே
ஆர்ப்பரிக்கச் செய்கிறீர்.
என்னைக் கைவிடாமலே
என்றும் காத்துக்கொள்ளுவீர்.

4 என் ஜீவன் நாள் முழுதும்
நன்மையும் க்ருபையுமே
சூழ்ந்து என்னைத் தொடரும்;
முற்றும் நான் அபாத்ரமே
இன்னும் கர்த்தர் வீட்டிலே
என்றென்றும் வாழ்ந்திருப்பேன்;
அப்போ மேய்ப்பரண்டையே
என்றும் வாழ்த்தி சுகிப்பேன்.

5 சென்ற ஆண்டில் ஏழையை
செம்மையாய் நடத்தினீர்.
வந்த துன்பம் தீமையை
பட்சமாய் விலக்கினீர்.

பாவம் துரோகம் யாவையும்
மன்னித்தீர் — அபாத்ரமே
ஆவி ஆத்மா தேகமும்
தாரேன் என்றும் ஸ்தோத்ரமே.

---

## 50

*Lord, I care not for riches*

7,6

1 ஆண்டவா, இவ்வுலக
வெள்ளி பொன் மதியேன்;
மேல் ஸ்தலம் எனக்குண்டு
நான் உம் பாதம் சேர்ந்தேன்;
உம் ராஜ்ய தொகை ஏட்டின்
என் மீட்பர் சொல்லீரோ;
மீண்டோர் நாமக்கணக்கில்
ஏழை பேர் தாக்கலோ?

*Ch.* என் பேர் தாக்கலாச்சோ?
ஏசின் ரத்தம் கொண்டோ?
ஜீவ புஸ்தகத்திலே or
(திவ்ய தொகை ஏட்டிலே)
என் பேர் தாக்கலாச்சோ?

2 ஆண்டவா, என் பாவமோ
மிக ஏராளமே
ஆனால் மீட்பா! உம் ரத்தம்
ஏழைக்குப் போதுமே;

உம் வாக்கு எனக்குண்டு
மாறாத உண்மையே;
ரத்தாம் பரமான பாவம்
பனி வெண்மையாமே.

3 ஓ! சிங்கார நகரம்
வாசஸ்தலம் மின்னே;
தங்குவோர் சுத்தர்களாம்
உடைதூய் வெண்மையே;
அங்கே தீமை அணுகி
பரிசுத்தம் கெடாதே;
வெண் தூதர் உடன் ஏட்டில் (or அதில்
என் பேர் தாக்கலாமே. [உண்டு)

---

## 51

*Prayer*

7's

1 என்னை ஆட்கொண்ட நாதா,
இன்றைக்கென் ஆகாரம்தா;
வேறென் கெதியாரையா,
இன்னும் உம்மை நம்புவேன்.

*Ch.* மீட்பருக்கு ஸ்தோத்திரம்,
மீட்பருக்கு ஸ்தோத்திரம்.
இப்போ என் பாரம் நீங்கிற்று
மீட்பருக்கு ஸ்தோத்திரம்.

2 உன்னைக் கைவிடேன் என்று
வாக்களித்தீர்; பொய்யன்று
ஏழை நம்பினேன்; இன்று
மீட்பருக்கு மகிமை.

3 வாரும் வல்ல ஆவியே,
ஏழை எந்தன் நெஞ்சிலே
முற்றும் என்னைக் காக்கவே
ஏசுவுக்கு மகிமை.

---

## 52

8,5

1 சத்துருக்கள் வாய்திறந்து
விழுங்கப் பார்க்கிறார்;
மித்துருக்கள் மோசம் செய்து
ஓடிப்போகிறார்.

*Ch.* ஜீவ நாயகா, காக்கும் நாயகா, (2 times)
ரத்தம் சிந்திக்கொண்ட என்னை
நோக்கும் நாயகா.

2 எதிர்த்து நின்று யுத்தம் செய்ய
சக்தியில்லையே;
அதிர்ச்சியில் நான் என் செய்வேனோ
தோன்றுதில்லையே.

3 எந்தன் கண்கள் உம்மையேதான்
நோக்கிப் பார்க்குதே;

உந்தன் கரம் நீட்டி இப்போ
ரட்சை தாருமே.

4 உந்தன் ஜீவன் தேவன் சொன்னீர்
ஏசுவுடனே
பந்தமாக உம்மிலேதான்
மறைந்திருக்குதே.

5 ஆத்துமாவே இப்போ நீ அல்
லேலூயா பாடு;
காத்துக் கொள்ளும் ஏசு நோக்கி
ஓட்டத்தில் ஓடு.

---

## 53

5,8,8,12

1 திரியேகா, அருள் நாதா,
திருமறை சொல் காக்கவா,
சிறியோனை ஆண்டு கொண்டே
திருச்சித்தம் தனையே நிறைவேற்ய்யா.

2 தொலைத்தீரே வியாதிகளை,
குலைத்தீரே கட்டுகளை,
அலைக்களிக்கும் ஆவியெல்லாம்
அழித்துச் சுகங்கொடுத்தீர், அற்புதனே.

3. எழுந்திருங்கள் என்றீரே,
எழுந்தார்கள் மரித்தோரே;

அளித்தீர் சொல் விஸ்வாசித்தோன்
"அரும் செயல் இவைவிட செய்வான் என்றே".

4 பிசாசும்மில் குடியென்றூர்,
நீசன் என்னை எது சொலார்;
நேசரவர்க்காய் மரித்தீர்,
தாசனுக்கும் அந்த ஆவி நீர் தாரீரோ.

5 என் நாமம் மகிமைக்கென்று
என்ன கேளும் ஈவேனென்று;
பின்ன மின்றி வாக்களித்தீர்
பேதை இந்தை நம்பி உம் பாதம் பிடித்தேன்.

6 வறியோரை நோக்குமையா.
இருள் நீக்கும் ஜோதி அய்யா;
இரங்கி இப்போ கரம் நீட்டி
இடர் நீங்கத் தொட்டு இதோ ரட்சிக்க வா.

7 ரத்தம் நம்பிச் சேர்ந்தவர்க்கும்
நித்தம் உம்மில் வல்லமையே
ரத்தம் கொண்டு தொட்டவர்க்கும்
சுத்த சுகம் அருள்புரி நஸ்ரேயனே.

8 ஏசையாவின் நாமமெங்கும்
ஓசைப்பட நீர் விளங்கும்
நாசமாகும் பாவிகள் தான்
நேசரைக் கிட்டிச்சேர அருள் புரியும்.

---

**54**

15,11.14

சென்ற ராத்திரி சேதமின்றி காத்தக்ருபா
இன்று பகல் ஏழைதாங்கும் ஏசுவே, [தெய்வமே
வந்து என்னில் பிரகாசியும் ஆவியே என்றுமே.

*Ch.* இன்றுகாலை காணச்செய்தீர், இரக்கமுள்ள
கருணைக்கடலாம் யேசுவே, வந்தனம் [தெய்வமே
அருமை நேசரின் ஆவியே, வந்தனம்–என்றுமே

2 பாவ ஜெயம் இன்றும்தாரும் பரிசுத்த தெய்வமே,
பாவம் வென்று பரம்சென்ற ஏசுவே;
பாவ இருள் நீக்கவந்த ஆவியே – எனக்கே.

3 என்கால் வழுவாமல் காக்க வாக்களித்தீர், தெய்வமே,
விண்மகிமை நோக்கிச்செய்யும் ஏசுவே;
மண் மயக்கம் நீங்க இழும் – ஆவியே, இன்றைக்கே.

4 சத்யவசனம் தந்தஎன் சத்வமுள்ள தெய்வமே,
நித்தியஜீவன் ஈவாய்த்தந்தீர், யேசுவே,
சத்யம்யாவும் போதிக்கும்நல் ஆவியே – போதியும்.

5 சத்துருவை சங்கரித்த சர்வவல்ல தெய்வமே,
மித்துருவாய் என்னைக் கொண்டீர், ஏசுவே,
செத்திருக்கும் பாவிஇழும் – ஆவியே, இன்றைக்கே.

6 எந்தன்ஜீவன் ஏசுவோடு மறைத்துக் காக்கும், தெய்வ
உந்தன்காயம் எந்தன் கோட்டை, யேசுவே, [மே,
தந்தேன் என்னை ஆண்டுகொள்ளும், ஆவியே,–
இன்றைக்கே.

## 55

15's

1 பாவத்தில் செத்திருந்த பாவிஎன்னை மீட்டுக்கொண்டார்.
*Ch.* ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம் என்றும் ஏசுவுக்கே; (Repeat)
2 சத்துரு மரணம் வென்று நித்ய ஜீவனைத் தந்தார்.
3 சுத்தனாக இருவென்று சுத்த ஆவியைத் தந்தார்.
4 லோக மாம்ச சத்ருவெல்ல நேசர் பாதமே கெதி.
5 சத்திய வார்த்தையினால் நித்தம் நித்தம் போதிக்கிறார்.
6 நித்யகரத்தில் வைத்து நித்தம் என்னைத் தாங்குகிறார்.
7 யேசுவின் நேசமார்பில் ஆசைதீர சாய்ந்துகொள்வேன்.
8 வேகத்தில் வந்து என்னை மேகத்திலே ஏற்றுக்கொள்வார்.
9 யேசின் சாயல் நானாகவே நேசபிதாவின் சித்தம்.
10 அல்லலூயா ஸ்தோத்ரம் பாடி ஆண்டாண்டும் வாழ்ந்திடுவேன்.

---

## 56

*Sweet hour of prayer*

8's

1. சுகிர்த இன்ப ஜெபமே!
கவலை நீக்கி என்னையே!
பிதா சமுகம் நிறுத்தாய்,
தேவை விருப்பம் கூறவாய்;
துன்பம் கஷ்டம் ஆபத்திலே,
ருசித்தேன் உன் ஆறுதலே;
தப்பினேன் சாத்தான் வலையே,
உன்னாலே இன்ப ஜெபமே!

2. சுகிர்த இன்ப ஜெபமே!
விண்ணப்பம் கொண்டேறுவயே;
சத்தியம் உண்மை உள்ளோர்தாம்
ஆசிர்வதிக்கப் பிணையாம்;
சமுகம் வார்த்தை கிருபையே,
தேடி நம்பச் சொன்னதாலே,
அவர்மேல் போட்டேன் பாரமே,
வாராயோ? இன்ப ஜெபமே!

3. சுகிர்த இன்ப ஜெபமே!
உன் ஆறுதல் எந்தன் பங்கே,
பிஸ்கா மலை நிற்குமட்டும்,
வீட்டைக் கண்டு தூங்குமட்டும்
மாம்சப் போர்வை நான் விடுவேன்,
பந்தயப் பொருள் பெறுவேன்,
மேலே கையில் கெம்பீரமே,
போய் வாரேன், இன்ப ஜெபமே!

---

## 57

13's

1 கல்வாரி ஏறவே (மலையில்) என்மேல் காதல்கொண்டீரே,
கள்ள மார்க்கம் போன என்னைக் கண்டு மீட்டீரே.

2 ரத்தத்தில் புரண்ட என்னை ரட்சை செய்யவே,
ரத்தம் சிந்தி ஸ்நானம் செய்ய சித்தம் கொண்டீரே.

3 முள்முடி சிவப்பு அங்கி செங்கோல் நாணலே,
முன் வணங்கி மூர்க்கமாய் முகத்தில் துப்பவே.

4 பாதகர்கள் தூஷிணிக்க வாய்பேசாமலே,
வேதனை இக்கோரணிகள் நீர் சகித்தீரே.

5 சொந்த ஜனம் இஸ்ரவேல் கொலைஞர் ஆனரே;
நிந்தையெல்லாம் உத்தரிக்க நெஞ்சம் வைத்தீரே.

6 நித்திய மரணம் வென்று சத்ரு வெல்லவே,
சத்தியனே ஜீவன் விட்டுயிர்த் தெழுந்தீரே.

7 கல்வாரி சிலுவையில் உம் ரத்தம் நோக்கவே,
எல்லாம் எந்தன் பாவங்களும் பறந்து போகுதே.

8 என் உள்ளம் கழுவி இப்போ உம்மோ டொற்றிடும்,
என்னில் உமதாவி வைத்து சாயலாக்கிடும்.

9 வேகமாய் நீர் ஆகாயத்தில் விருந்து செய்யவே,
மேகமதில் வந்து என்னைமேல் சேர்த்திடுமே.

10 அல்லேலூயா பாடி உம்மை போற்றி வாழ்த்தவே,
அல்லேலூயா, என்றென்றைக்கும் அல்லேலூயாவே.

---

## 58

8's

1 என்னை உம் பாதம் இழுமேன்,
இப்போ என்னுடன் பேசுமேன்,
உம் சமுகம் நான் உணர;
அன்பின் சத்தம் செவி கேட்க,
உம் ஆவியால் நீர் செய்யவே,
என் ஆத்மா உம்மைப் போற்றவே,
க்ருபை கூறும்; இதோ வாரேன்,
ஏழைப்பிள்ளை கெஞ்சுகிறேன். (Repeat).

2 ஏழை விருப்பம் தேவையும்
உமக்கே முன்னால் தெரியும்;
நான் யேசுவைப்போல் ஆகவே
பாவிக்கும் வழி காட்டவே,
தாரேன் என்னை முழுதத்தம்,
ருசித்தேன் உம் திருரத்தம்,
க்ருபை கூறும் இதோவாரேன்,
ஏழைப்பிள்ளை கெஞ்சுகிறேன். (Repeat)

3 நெஞ்சில் கறை அதிகமே,
சஞ்சலங்கள் மிகுதியே,
என் உள்ளத்தில் பெலவீனம்
அவிசுவாசம் அதிகம்,
பாவமறக் கழுவுமேன்,
சுத்தாவியால் எறியுமேன்,
க்ருபை கூறும். இதோ வாரேன்,
ஏழைப்பிள்ளை கெஞ்சுகிறேன்.

4 உள்ளங்கையில் வைத்தென்னை நீர்
தாங்கிக் கண்மணிபோல் காத்தீர்;
துன்பங்களில் நீர் நல் துணை,
இருள் நேரம் தலையணை,
உம் நாள் மட்டும் நிலை நிற்க,
மகிமையில் பங்கு பெற,
க்ருபை கூறும். இதோ, வாரேன்,
ஏழைப்பிள்ளை கெஞ்சுகிறேன்.

---

**59**

15,16

1 ஏசுவே, உம்மையல்லால் ஏழைக்கார் துணையே,
பாசமாகத் தேடிவந்த நேசனே, நீர் என் கெதியே.

*Ch.* வீசுதே, வீசுதே, வீசுதே அன்பின் ஒளி

2 எந்தன் இருள் நீக்கவந்த உந்தன் அருமைச்சுதனே,
சொந்தமாக என்னை மீட்க, சிந்தினர் திரு ரத்தமே.

3 சுத்த ஆவிஎன்னில் வைத்து சித்தம் நிறைவேற்றிடவே,
நித்தம் உம்மைக் கெஞ்சுகிறேன், குற்றமறக் காத்திடுமே.

---

**60**

11,8,12,8

*Ch.* இரங்கும், இரங்கும், யேசு நாயகா,
ஏழை முகம் பாரும்;
ஏழை முகம் பாரும், எந்தன்
கலியாவையும் தீரும்.

1 வலிய வந்து இழுத்து ரட்சித்தீர்;
வான் புவி யாளும் மாகோனே;
வறியேன் எனக்கு உம் வாக்கு மளித்தீர்;
இருப்பேன் என்று முன்னுடனே.

2 ஏழை நான் படும் கஷ்டங்கள் துன்பங்கள்
எல்லாம் என் பாவ தோஷத்தால்,
பாவத்தை நீக்கினீர், பாவத்தின் கஸ்திகள்
பாவி எனக்கேன்? ரத்தத்தால்.

3 ஏழை என் பாவம் எல்லாம் பொறுத்து நீர்
இரங்கிக் எங்களைப் பாரும்;
ஏசுவின் முகத்தை ஏறிட்டுப்பார்த்து நீர்
ஏழைகள் துன்பமே நீக்கும்.

4 வானும் பூமியும் ஒழிந்து போகுமே
என் வார்த்தை ஒழியா என்றீர்;
நான் விலகி உன்னை கைவிடேனென்றே
வான் மன்னா வாக்கு மளித்தீர்.

5 ஏழைகள் நம்பி உம் பாதம் பிடிக்கிறோம்;
இரங்கும் இப்போ தாமதமேன்;
ஏசுவின் நாமத்தில் வீழ்ந்துமை கெஞ்சுறோம்
இரங்கிக் கலி தீருமேன்.

6 ஆண்டவா, உம்கரம் அடைக்கலம் தாரும்;
வேண்டும் க்ருபை உம்மிலுண்டே;
மாண்டாலும் உம்மையே நம்ப பெலன்தாரும்
பண்டு நாள் யோபுவின் தேவே.

7 அன்பின்பிதா உம்க்கனந்த ஸ்தோத்திரம்,
அன்பின் சுதனே உமக்கும்,
அரூபியான் சுத்தாவியே உமக்கும்,
அனந்த ஸ்தோத்திரம் என்றும்.

---

## 61

11, 8, 12, 8

*Ch.* இரங்கும், இரங்கும் யேசு நாயகா,
ஏழை முகம் பாரும்;
ஏழை முகம் பாரும், எந்தன்
கலியாவையும் தீரும்

1 நான் உன்னை அனாதி கால முதலல்லோ
நேசித்து தெரிந்து வைத்தேன்;
உன்னை உன் தாயின் வயிற்றிலே வைத்தல்லோ
என் தாசனாகக் கொண்டேன்.

2 என்னால் முடியாத காரியம் ஒன்றுண்டோ?
என்னைப் பரீட்சித்துப் பாரேன்.
என் வார்த்தையினாலே எல்லாம் வகுத்தல்லோ
உன்னைத் தாசனாகக் கொண்டேன்.

3 உன்னை என் உள்ளங்கையில் நான் வரைந்தேன்;
உண்மை நீ மனம் சோராய்.
உன்னை இன்னும் என் கண் விழிபோல் காப்பேன்;
பின்னை ஏன் பயம் நீ கொள்வாய்.

4 என்சமுகம் என்றும் உன்னுடன் போமே
என்வழி காத்து நடவேன்.
உன் சுயபுத்தியின் ஒளியைச் சாராமலே
என்மேல் உன் பாரம் போடேன்.

---

## 62

Tune: *Showers of Blessing*

8,7

1 இதோ உம் நாமத்தில் வாரோம்,
உயிர்ப்பியும் எங்கள் தேவே.
"க்ருபையின் வெள்ளமே தாரோம்"
என்ற வாக்குறைத்தீரே.

*Ch.* க்ருபையாய் விண்ணப்பம் (வேண்டுதல்) கேளும்,
க்ருபையின் வாக்கதுவே.
வானங்கள் திறந்தே ஊற்றும்,
எங்கும் என் உள்ளத்திலே.

2 க்ருபையின் வெள்ளங்கள் இப்போ
என் உள்ளமதில் பாயட்டுமே;
க்ருபாசனத்தண்டை இதோ
உம் வாக்கில் நிற்கிறோமே.

3 "ஜீவ நீர் நதிகள் ஓடும்"
பேரன்பின் மாறா வாக்கே;
இன்றெங்கள் நெஞ்சிலே தாரும்
இடங்கொள்ளாமல் போகுமட்டே.

4 பேரன்பின் வெள்ளந்தான் வேண்டும்
தேவக்கிருபா நதியே;
தெய்வீக மாக்கிடும், மாண்டும்
ஜீவிக்கும் ரட்சகரே.

---

## 63

**9's**

1 சென்ற ஜீவிய நாட்களெல்லாம்
சொந்த ஜனத்துடன் நடந்தீர்;
வந்த பாடுகள் கஷ்டமெல்லாம்
மந்தமேகத்தைப்போல் நீக்கினீர்.

*Ch.* காரும், காரும் நித்திரை செய்யும்போது,
ஆண்டவா! உம் கண்விழிபோல்
எமைக்காரும் நீர் காவல் செய்து.
(கையில்வைத்து)

2 இந்நேரம் உம் திவ்விய மார்பில்
அன்பின் கையாலணைத்துக்கொள்ளும்;
இன்பதூக்கம் — கண்விழிக்கையில்
இன்னும் அண்டை இருக்கச்செய்யும்.

3 என்கண் இருள்மூடும் நேரத்தில்,
என் நேசா, உம் சாயல் காண்பியும்;
என் ஆத்துமா தத்தளிக்கையில்
என் பக்கமே நின்றுபேசிடும்.

4 என் மூச்சு ஒடுங்கும் நேரத்தில்,
என் நேசா! என்ஆவி ஏற்றிடும்;
என் மீட்பா! எக்காளம் தொனிக்கையில்,
என் தேவா! உம் சாயல் தந்திடும்.

## 64

### *Washed in the Blood of the Lamb*

*Ch.* மனமாறி ரட்சிக்கப்பட்டேன்,
இரத்தத்தால், ரத்தத்தால்,
யேசுவின் ரத்தத்தால்.

1 பரிசுத்தாவி தாரும்.
2 பாவமறக் கழுவும்.
3 பாவம் செய்யாமற்காரும்.
4 சுத்த இதயம் தாரும்.
5 பரிசுத்தனாக்கிடும்.
6 யேசுவின் சாயல் தாரும்.
7 பாவி இழுக்கச் செய்யும்.
8 இன்பக்கரை சேர்த்திடும்.

---

## 65

### *Three in one*

6, 6, 8, 6

1 அனாதி தேவனே!
அருள் மறையோனே!
அன்பு நிறைந்த நீதியே!
அரூப ஜோதியே!

2 தேவன் தற்சுதனே!
தேவன் சொரூபியே!
தேவ மகிமை ஒளியே!
தெய்வீக நேசரே!

3 பரிசுத்தாவியே!
பாவியின் ஜீவனே!
பரம வழி காட்டியே!
பக்தனின் வாஞ்சையே!

4 திரியேக கர்த்தரே!
தினமும் ஸ்தோத்ரமே;
திவ்விய சாயல் தாருமே;
திருப் பாதம்சேருமே.

---

## 66

*My times are in Thy hand*

6,6,8,6

1 என் நாள் உம் கரமே,
தேவா, இருக்கட்டும்;
என் ஜீவன் ஆத்மா நேசரும்
உம் காவல் கொண்டிடும்.

2 என் நாள் உம் கரமே,
இதென் ஆறுதலே.
துன்பம், இன்பம், இருள், ஒளி,
உம் திவ்ய செயலே.

3 என் நாள் உம் கரமே,
ஏன் பயம் எனக்கே?
பிதாவே, நீர் உம் பிள்ளைக்கு
வீண் நோவுண்டாக்கீரே.

4 என் நாள் உம் கரமே,
குருசில் மாண்டோரே;
என்பாவத்தால் பீறுண்டதும்
இப்போதென் தஞ்சமே.

5 என் நாள் உம் கரமே,
இதோ நான் தத்தமே;
உம் அன்பை நெஞ்சில் ஊற்றிடும்
அப்போ மகிமையே.

6 என் நாள் உம் கரமே,
லோகம் மாள்கிறதே;
உயர்த்தப்பட்ட ரட்சகா,
பாவியை இழுமே.

*Bed time*

7 என் நாள் உம் கரமே
உம்மார்பில் தூங்குவேன்;
என்ஆத்துமா உம்கரத்தில்
இப்போ ஒப்பிக்கிறேன்.

8 என் நாள் உம் கரமே,
உம் முகம் பார்க்கவே;
நான் மரித்தாலும் என் கண்கள்
காலை விழிக்குமே.

*or*

என் நாள் உம் கரமே,
என் கண் விழிக்குமே;
நான் மரித்தாலும் உம் முகம்
காலையில் பார்ப்பேனே.

## 67

Tune : பாவிகேள் உன் ஆண்டவர்

1 சுத்த பிதா நீர் கேளும்;
சுத்த மீட்பா கண் பாரும்;
சுத்த ஆவி கிட்டிடும்;
பிதா, சுதன், ஆவி கேளும்.

2 பிதாவே பாவம் மன்னியும்;
இரட்சகா இரங்கிடும்;
ஆவியே சுத்தம் செய்யும்;
திரித்வ தேவா ரட்சியும்.

3 பிதாவே, அன்புருசியே,
மீட்பா, என் சமாதானம்;
ஆவி வாரும் ஏவவே,
திரியேகரே, நீர் ஆளும்.

4 பிதா, சுதன், சுத்தாவியே,
ஒன்றான யெகோவாவே;
என்னில் சாயை வீசியே,
என்றும் ஆளும் தேவனே.

---

## 68

*Holy Spirit, Faithful Guide*

7's

1 உத்தம சுத்தாவியே,
கிறிஸ்தியான் வழிகாட்டியே,

ஏழை மெல்ல நடத்தும்,
பரதேசி வனாந்தரம்
இளைத்தோர் களிக்கிறார்;
இன்ப சத்தம் கேட்கிறார்;
“ அலைவோனே, வா வீடு,
சேர்ப்பேன் பற்றிக்கொண்டிரு”.

2 இணைபிரியா நேசரே,
உதவி என்றும் செய்வோரே;
சந்தேகம் பயத்திற்கும்
இடம் கொடீர்; இருளிலும்
புசல்மும் முரிக்கையில்
சொல்லும் ஆவி தோய்கையில்
“அலைவோனே, வா வீடு
சேர்ப்பேன், பற்றிக்கொண்டிரு”.

3 துன்ப நாள் முடிகையில்,
எப்போ வென்றிருக்கையில்,
மோட்சம் ஜெபம் நாமமே,
மீந்திருக்கும் வேளையே,
இருள் நதி தாண்டச்சே,
சொல்லும் ஏசின் ரத்தமே
“அலைவோனே, வா வீடு
சேர்ப்பேன், பற்றிக்கொண்டிரு”.

---

## 69

### *Jesus lover of my soul*

7's

1 ஏசு ஆத்ம நாயகா,
இடம் கொடும் மடியில்,
வெள்ளம் மோதும் ஓய்வில்லா
கொந்தளிக்கும் புசலில்.
அணைத்துக்கொள்ளும் மீட்பரே,
கோஷ்டம் நீங்குமட்டுமே;
அப்பால் வீட்டில் சுகமே,
என்னை சேர்த்துக்கொள்ளுமே.

2 வேறு தஞ்சமே இல்லை;
சோறும் ஆத்மா நோக்குதே;
கைவிடாமல் நீர் என்னை
இன்னும் தேற்றித் தாங்குமே;
நீர் என் முழு நம்பிக்கை
என் பெலன் எல்லாம் நீரே;
மூடிக் காரும் ஏழையை
உம் செட்டை நிழலாலே.

3 கிறிஸ்து! நீரே என் தேவை
உம்மில் உண்டுமே யாவும்;
வீழ்ந்தோன், தோய்ந்தோன் க்ருடனை
தூக்கித் தாங்கி நடத்தும்;
நீதி, சுத்தம், உம் நாமம்,
நான் முற்றும் அசுத்தமே;
நான் சமூலமும் பாவம்
நீரோ க்ருபை சத்யமே.

4 “ க்ருபைக் கடல் “ உம்மிலே
என் பாவம் மூட உண்டும்;
அருள் வாரி பொங்கியே
உள்ளம் சுத்தம் காக்கட்டும்;
ஜீவ ஊற்று நீர்தானே
மூழ்கி பானம் பண்ணுவேன்;
ஊறி என் உள்ளத்திலே
நித்ய காலம் பொங்குமேன்.
or நித்யமாய் பெருகுமேன்.

---

## 70

Tune : *Revive Thy Work*

6, 6, 8, 6

1 உயிர்ப்பியும் தேவா,
அடியார் காணட்டும்;
ஆத்மாவில் நீரே பேசிடும்,
உம் ஜனம் கேட்கட்டும்

*Chorus* உயிர்ப்பியும் தேவா,
பாதம் பணிகையில்,
தாழும் பிரிய தேவா தாழும்,
க்ரியை செய்ய என்னில்.

2 உயிர்ப்பியும் தேவா,
உம் நாமம் உயர்த்தும்,
உம் அன்பு எங்கள் உள்ளத்தில்
பற்றி எரியட்டும்.

3 க்ரியை செய்யும் தேவா,
உம் திவ்ய வார்த்தையால்,
நெஞ்சில் சத்தியம் கேட்கட்டும்,
மெய் விசுவாசத்தால்.

4 க்ரியை செய்யும் தேவா,
"ஆவி" ஸ்நானம் தாரும்,
மகிமை எல்லாம் உமக்கே
எமக்கருள் போதும்.

---

## 71

Tune: *Father, I strech my hands to Thee*

8, 6

1 பிதாவே, என் கண் நோக்குதே,
கெதி வேறில்லையே;
இப்போது நீர் கைவிட்டாலே,
நான் எங்கே போவேனே.

***Chorus*** நான் நம்புவேன், நான் நம்புவேன்,
யேசு மரித்தாரே,
ரத்தத்தால் மீட்டாரே;
அவர் ரத்தம் திவ்விய ரத்தம்,
இன்னும் என்ன நேரிட்டாலும்,
என் பாவம் நீக்கிற்றே.
கைவிடமாட்டாரே

2 சுதன் என்ன பாடு பட்டார்,
நான் தோன்றும் முன்னமே,
நோவு கஷ்டங்கள் சகித்தார்,
தீ நின்று மீட்கவே.

3 யேசுவே, இதை நம்பவே,
உம் வல்லமை வரும்;
எந்தன் குறைகள் யாவுமே,
நீக்குவீர் இந்நேரம்.

4 கர்த்தாவே, என் கண்கள் உம்மை
ஆவலாய் நோக்குதே,
தாரும் இப்போ விஸ்வாசத்தை
அதின்றி சாவேனே.

---

## 72

7's

1 நேசா வாக்களித்தீரே,
சேர்ந்தோம் உம் நாமத்திலே,
எங்கள் நடுவில் வாரும்,
இங்கும் சமுகம் தாரும்.

2 கர்த்தரே, சேர்த்துக்கொள்ளும்;
உம் ஆவியால் நிரப்பும்,
எங்கள் உள்ளம் தங்குமே,
நற்கனிகள் ஈய்வே.

3 உம்மில் பூரண ராகவே,
ஆக்கும் உம் மகிமைக்கே,
உம் சமுகம் நிற்கவே,
தாரும் சுத்தரின் பங்கே.

---

## 73

### *I came a wanderer*

8, 6

1 அலைந் திளைத்து நான் வந்தேன்;
பாதை காரிருளே,
என் தேவா, எம்மை நோக்கினேன்;
அப்போ பிரகாசமே.

*Ch.* யேசுவே, நேச ரட்சகா,
நான் என்ன செய்வேனே,
என்மேல் நீர் வைத்த அற்புத
க்ருபை அன்புக்குமே.

2 ஐயம் பயத்துடன் வந்தேன்,
உம் வார்த்தை நம்பியே,
கேட்டேன்! ரத்தம் பார்த்தவுடன்,
மன்னிப்பின் சத்தமே.

3 உம் ஆவி வல்லமை ஏழை
நெஞ்சில் உணர்த்திடும்;
உம் வார்த்தை ஒளி, கேடகம்,
பெலனே ஆக்கிடும்.

4 உம் சத்தம் பெருங் கூச்சலில்
அறியப் போதியும்,
என் ஜீவன் நம்பிக்கை பங்கு
என் கீதமாயிரும்.

---

## 74

### *Approach my soul*

8, 6

1 கிருபாசனம் கிட்டிச் சேர்வேன்,
யேசு ஜெபம் கேட்கிறார்;
அவர் பாதத்தில் விழுவேன்,
அங்கே யாரும் மாளார்.

2 உம் வாக்கு எந்தன் கெதியே,
அதால் கிட்டி வந்தேன்,
நொந்த பாவி அழைக்றீரே,
இதோ, நானும் வந்தேன்.

3 பாவப் பாரத்தால் தோய்ந்தேனே,
சாத்தானின் கோஷ்டமே,
போர் வெளியே, பயம் உள்ளே,
ஆறுதல் தாருமே.

4 நீரே கேடகம் தஞ்சமே,
உம் பக்கம் தங்குவேன்,
என் மூர்க்க சத்ரு வந்தாலே,
உம் ரத்தம் காட்டுவேன்.

5 அற்புத அன்பு மரிக்க,
நிந்தையை சுமந்து,
என்னைப்போல் பாவிகள் சேர,
உம் நாமம் பிடித்து.

---

## 75

### *Pass me not*

**8's**

1 தேவனே, எந்தன் பிதாவே,
யேசுவின் ரத்தத்தால்
ஏழை என் பாவம் மன்னித்தீர்.
ஏராள க்ருபையால்

*Ch.* யெகோவாவே,
பாதம் வீழ்கிறேன்;
ஏசின் நாமத்தினிமித்தம்
ஏற்றுக் கொள்ளுமேன்.

யேசு மீட்பா,
பாதம் கெஞ்சுகிறேன்;
ஏழை என்னைக் கைவிடாமல்
காத்துக் கொள்ளுமேன்.

2 தேவனே, உமதாவியால்
ஏழை ஆட்கொண்டீர்;
ஏசின் அன்பால் எந்தன் நெஞ்சை
வச மாக்கினீர்.

3 சென்ற கால மென்னுடனே
நின்று ரட்சித்தீர்;
வந்த பாவம் துன்பம் நீக்கி
சொந்த மாக்கினீர்.

4 இன்று ஏழையின் நெருக்கம்
தாங்கக் கூடுமோ?
வந்து இப்போ விடுவிக்க
சித்தம் கொள்ளீரோ?

5 "கெஞ்சும் ஏழை நான் ஒர்காலும்
தள்ளவே மாட்டேன்;
தஞ்சமென்று அண்டினோர்க்கு
தயை காட்டுவேன்."

6 "நான் நானே உன் பாவம் நீக்கி
மீட்டுக்கொண்டேனே;
நான் அழைத்தேன் நீ என் சொந்தம்
காத்துக் கொள்வேனே."

7 "தீமை உன்னை அணுகாது
என் கண்மணியே;
நானே உன்னை விடுவிப்பேன்
என் நிமித்தமே".

---

## 76

*O Thou God that hearest prayer.*

7's

1 ஜெபம் கேட்கும் தேவனே!
எந்நேரமும் எங்குமே,
என்னை மீட்டோர் நிமித்தம்,
கேளும் எந்தன் ஆத்திரம்
இப்போ முகம் காட்டுமே,
கிருபா சமுத்ரமே.

2 தள்ளுவீரோ? தஞ்சமே,
ஐயோ! நானும் மண்தானே,
விடாதேயும் வழிதப்ப
சாத்தானின் இறையாக,
ஏழை நெஞ்சை இழுத்தே.
(*or* ஆட்கொண்டே)
பூரிப்பாக்கும் அன்பிலே.

3 கேட்டு மீளும் கர்த்தரே,
என் பிடி "உம் வார்த்தையே,"
பாவக் கறை கழுவும்,
ஆவியால் நீர் ஆண்டிடும்,
நான் உம் பிள்ளை என்று நீர்
ரட்சிப்பால் உணர்த்துவீர்.

---

## 77

*Testimony.*

9's

1 பாவத்தில் வெகுநாட் கழித்தேன்
பாதகனாய்த் திரிந்தலைந்தேன்,
வேகமாய்த் தீ நரகில் விழ,
ஆவலாய்ச் செய்தேன் தீமைபல.

*Ch.* ஜீவ ஊற்றண்டை நான் விழுந்தேன்,
ஏசுவின் சத்தம் கேட்கின்றது,
என் பாவப் பாரம் நீக்கி விட்டு,
"சுகத்துடனே நீ போ" என்கிறார்.

2 சன்மார்க்க வேஷம் பூண்டிருந்தேன்,
துன்மார்க்க நெஞ்சும் வைத்திருந்தேன்;
இன்பம் கண் இச்சை என்று தீர்த்தேன்;
வம்புகள் பேசி நாட் கழித்தேன்.

3 பாவத்தின் சம்பளம் மரணம்,
பாவியின் முடிவு நரகம்,
பாவியே இன்று நீ மரிக்க
தாவுமிடமெதென்று கேட்க.

---

**78**

8,8,8,8

1 அன்பின் பிதா என் தேவனே,
அனாதி சித்தப்படியே
அன்பின் சுதன் நீர் தந்தீரே,
வானாதி சேனை போற்றுதே.

2 ஏசுவே! நீரே ஆட்கொண்டீர்,
என்னை முற்றுமே ஆண்டிடும்,
நேசம் வைத்தென்னை ரட்சித்தீர்,
பாசம் அழித்துக் காத்திடும்.

3 தேவாவியே, இப்போதென்னை
யேசுவோடே நீர் ஒட்டிடும்;
என் ஆவி ஆத்மா ஜீவனை
தெய்வீகமாக்கிக் காத்திடும்.

4 த்ரியேக கர்த்தர் உமக்கே
என்துதி ஸ்தோத்ரம் ஏறுதே;
க்ருபையால் மீட்ட கூட்டமே
என்றென்றும் உம்மைப் போற்றுமே.

---

**79**

Tune :. நம்பவேண்டாம்

8's

1 அப்பனெங்கே, தம்பி எங்கே,
அக்காளெங்கே, தங்கை யெங்கே,
அன்புடனே வாழ்ந்திருந்த
'ருமை மனையாளு மெங்கே.

2 பந்து ஜனம் இஷ்டரெங்கே,
பள்ளிக்கூடத் தோழரெங்கே,
பலமுறை தேடிவந்த
பக்தரெனும் கூட்டமெங்கே.

3 இன்பமெங்கே, அன்பு எங்கே,
இவ்வுலக ஆஸ்தி யெங்கே,
இன்பம் காட்டி மோசம் செய்த
இல்லறப் பொய் வாழ்கையெங்கே.

4 போய்விட்டாரே, போய்விட்டாரே,
போனவிடம் தோன்றலையே;
போக்குச் சொல்லி நீங்கிங்கொண்ட
பொய்யர் வழி தெரியலையே.

5 பாசமுள்ள யேசும் நானும்
நேசமாகக் கூடி இன்னும்
வாசம் பண்ணும் கிருபைதர
வீசும் அன்பு என்றும் வேண்டும்.

---

## 80

Tune:— *On the banks of the beautiful river*

9, 7

1 என் தாயின் வயிற்றிலே தானே
என்னைப் பிரித்தெடுத்தீர்;
நான் அதை அறியாததாலே
காணாதார் போலிருந்தீர்.

*Ch.* இம்மட்டும் எமை ஆண்டவர்க்கு
ஸ்தோத்திரம், ஸ்தோத்திரம்,
இம்மட்டும் எமை ஆண்டவர்க்கு
ஸ்தோத்திரம் எந்நாளும்.

2 அகோர பாவங்களி லென்னை
நீர் தாமே கண்டெடுத்தீர்;
கல்வாரி ரத்தத்தாலே என்னை
கறை நீக்கி ஆட்கொண்டீர்.

3 அக்கினி சூளையின் மத்தியில்
பக்கம் துணை நடந்தீர்;
துன்பமை சாகரப் புசலில்
அன்புடன் ஆதரித்தீர்.

4 என் காலம் உமது கரத்தில்
என்றென்று மிருக்குதல்லோ;
பொக்ஷம் சர்வ வல்லமை உம்மில்
ஏழை எமக்குண்டல்லோ.

---

## 81

*I was once far away*

10, 8

1 என் மீட்பர்க்கு தூரமாய்த் திரிந்தேன்,
பாவத்தால் செத்த மாதுரோகி
கிறிஸ்து மீட்கக் கூடுமோ — நினைத்தேன்
என்னைப்போல் கெட்ட மாபாவி.

2 இருளில் என் மனம்போல அலைந்தேன்,
வெளிச்சம் தோன்றவே இல்லை,
திகிலால் நிறைந்து புலம்பினேன்,
ஐயே நம்பிக்கையே இல்லை.

3 இருள் மூடி கஸ்திப்படுகையில்
கேட்டேன் ஓர் மெல்லிய தொனி;
" என்னை நோக்கிப்பார், வல்லமை என்னில்
உண்டுனை ரட்சிக்கப் பாவி."

4 இதோ, அது என் பாவ ரட்சகன்
நேசமாய் அழைக்கும் சத்தம்;
அழுதேன் பாவிகளில் பாதகன்
நீக்குவீரோ எந்தன் பாவம்.

5 ஏசுவை நம்ப கிருபை பெற்றேன்,
ஆத்மத்தில் சந்தோஷம் தந்தார்,
அவரை முழு நெஞ்சால் துதிப்பேன்,
கொடும் பாவி என்னை ரட்சித்தார்.

6 இருளிலே நான் இனி நடவேன்,
ஒளி என்மேல் பிரகாசமே;
இப்போ மற்றோர்க்கு சாட்சி சொல்லுவேன்
ஏ சென்னை மீட்ட விதமே.

7 இங்கென் பிரயாணம் முடிந்த பின்னே,
பார்ப்பேன் நேச மீட்பரையே,
அங்கவரை என்றும்து திப்பேனே,
பாவி என்னையும் மீட்டாரே.

---

## 82

### *His name shall be called Wonderful*

8's

1 கிறிஸ்து பாவ பலியானர்; என்ன அற்புதமீட்பர்!
மீட்கப்பட்டோம்,கிரயம்சந்தார்; என்ன அற்புதமீட்பர்!

*Ch.* என்ன அற்புதமீட்பர்! என் ஏசு, என்மீட்பர்,
என்ன அற்புதமீட்பர்! என் ஏசு நேசர்.

2 ரத்தம்சிந்தி சுத்தம்செய்தார்; என்ன அற்புதமீட்பர்!
தேவனேடு ஒன்று சேர்த்தார்; என்ன அற்புதமீட்பர்!

3 என் ஆத்மா கறை கழுவினர், என்ன அற்புதமீட்பர்!
அதில் ஜீவித்து ஆள்கிருர் or } ,, ,,
அதில் ராஜ்ரீகம் செய்கிருர். } ,, ,,

4 பாதையில் பக்கம் நடக்கிருர்; ,, ,,
உண்மையாய் என்றும் காக்கிருர். ,, ,,

5 பாவத்தின்மேல் பெலன்தாரார்; ,, ,,
சோதனேயில் ஜெயம் தாரார். ,, ,,

6 என் நெஞ்சவர்க்கே சொந்தமே; ,, ,,
வேறென்றிற்கும் பங்கில்லேயே. ,, ,,

---

## 83

*I heard the voice of Jesus say*

1 யேசுவின் சத்தம் நான் கேட்டேன்;
"வந்து இளைப்பாறு,
களைத்தோனே சுகமாய் என்
நெஞ்சில் சாய்ந்து கொள்ளு."
யேசுவண்டை நீசன் வந்தேன்
தவித்திளைத்தோனாய்
அவரில் ஆறித்தேறினேன்;
ஆக்கினார் களிப்பாய்.

2 யேசுவின் சத்தம் நான் கேட்டேன்;
"இதோ ஜீவ தண்ணீர்
இலவசம், தாகம் தீர்க்கும்,
குடியும் ஜீவிப்பீர்."
இதோ வந்தேன் பானம் செய்தேன்,
ஜீவநதியிலே தாகம் தீர்ந்துயிரடைந்தேன்
என் ஜீவன் அவரே.

3 முன்போல யேசு பேசினார்;
"லோக ஒளி நானே
பார் என்னை! உள் இருள் நீங்கும்
உன் நாள் பிரகாசமே."
பார்த்து நான் பெற்றேன் "நீதியின்
சூரியன்" அவரில்,
நடப்பேன் பிரயாணமெல்லாம்
ஜீவனின் ஒளியில்.

## 84

### *I was a wandering sheep.*

6, 8, 6,

1 நான் ஓர் துஷ்ட ஆடு,
குடில் பிரியமில்லை,
என் மேய்ப்பன் சத்தம் வெறுப்பே,
இஷ்டம் அலையவே.
நான் ஓர் கெட்ட பிள்ளை,
வீடென்றால் கசப்பே,
பிதாவின் சத்தம் வெறுப்பு,
இஷ்டம் அலையவே.

2 மேய்ப்பன் ஆட்டைத் தேடி,
பிதா பிள்ளை தேடி,
காடும் மேடும் வனாந்தரமும்,
தொடர்ந்தார் என் அடி
கண்டு பிடித்தாரே,
தோய்ந்து சாகையிலே,
விடுவித்தார் அன்பின் கட்டால்,
மீட்டார் கெட்டோனையே.

3 யேசு என் மேய்ப்பரே,
என்னையும் நேசித்தார்,
தம் ரத்தத்தால் என்னைப் பூசி,
சொஸ்தமு மாக்கினார்,
கெட்டோனைத் தேடினார்,
அலைவோனைக் கண்டார்,
அவர் தோளில் வீடு சேர்த்து
இன்னமும் காக்கிறார்.

4 முன்னே துஷ்ட ஆடு
அடங்க மனமில்லை,
இப்போ மீட்பர் சத்தம் வாஞ்சை
பிரியேன் என் கன்மலை,
முன்னே கெட்ட பிள்ளை
அலையப் பிரியமே,
இப்போ "பிதா சத்தம்" "வீடும்"
எங்கும் என் ஆவலே.

---

## 85

*I'm not ashamed*

8,6

1 கர்த்தரை உயர்த்த வெட்கேன்
அவர்க்காய்ப் பேசவும்
திவ்ய வார்த்தை கனம் காப்பேன்
சிலுவை மேன்மையும்.

*Ch.* சிலுவை யண்டையில் பேரொளி காணவே,
என்பாவப்பாரம் நீங்கிப் போயிற்றே......
விசுவாசத்தால் பார்வை பெற்றேனே,
இப்போ சந்தோஷம் என்றுமே.

2 யேசு என் தேவன் அறிவேன்,
இந்நாமம் என் "சுக்கான்;"
வெட்கப் படுத்தார் நம்புவேன்,
நம்பிக்கை வீணக்கார்.

3 யேசு வாக்கு கன் மலையே,
உண்மை காத்துக்கொள்வார்;
கரம் ஒப்புவித்ததையே
அந்நாள் மட்டும் காப்பார்.

4 அப்போ ஏழை ஒப்புக் கொள்வார்,
பிதா சமுகத்தில்
எனக்கோர் ஸ்தலம் தருவார்,
புது எருஸ்லேமில்.

---

## 86

### *Must I go an empty handed*

8,7

1 வெறுங் கையனாக நேச
மீட்பர் முகம் பார்க்கவா ?
ஓர் நாள் "ஊழியம்" "ஜெயசின்னம்"
இல்லாமலே நிற்கவா?

*Ch.* வெறுங்கையனாக எந்தன்
மீட்பரை சந்திக்கவா ?
வாழ்த்த ஓர் ஆத்மாவுமின்றி
வெறுங்கையாய்ப் போகவா ?

2 சாவுக்காக அஞ்சவில்லை
யேசு மீட்டுக் கொண்டாரே;
ஆனால் துக்கம் வெறுங்கையாய்
சந்திக்கவும் ஆச்சுதே.

3 ஓ வீணான ஜீவ நாட்கள்
இப்போ திரும்ப பெற்றாலே,
உழைப்பேன் என் ரட்சகர்க்காய்
அவர் சித்தம் பாக்யமே.

4 பக்தரே நீர் ஊக்கத்துடன்
உழையும் உம் நாளிலே,
சாநாள் வருமுன் ஆத்மாக்கள்
மீளும் தக்க நாளிலே.

---

## 87

*This is my story; This is my song*

9's

1 ஏசு என் ஜீவன், என் மேய்ப்பரே,
ஏசு என் கோட்டை, என் தஞ்சமே,
ஏசு என் செல்வம், என் கிரீடமே,
என்றும் சுகித்து வாழ்ந்திடவே.

*Ch.* இதே என் சாட்சி, என் கீதமே,
ஏசுவைப் போற்றல் எக்காலமே;
இவர் என் மேய்ப்பர் இவரன்பில்
என்றும் சுகித்து வாழ்ந்திருப்பேன்.

2 இம்மட்டும் அவரில் நிலைத்தேன்,
இன்னும் அவரை நம்புவேன்,
இன்று சிலுவை நான் சுமப்பேன்,
அன்று பொன்முடி நான் தரிப்பேன்.

3 லோகத்தார் ஏசுவை மறந்து,
லோகத்தில் சென்றுழன்றலைந்து,
லோகமே கெதியென்று வாழ்வார்,
ஏகமாய்த் தீ நகரில் வீழ்வார்.

---

## 88

*God's word,*

8,6

1 கருத்தாய்க் கனிவாய்ப் பாடு
ஜீவாற்புத வார்த்தை,
அதின் திவ்ய மேன்மை காட்டு
ஜீவாற்புத, வார்த்தை
திவ்ய ஜீவ வார்த்தை,
காட்டும் பரம பாதை.

*Ch.* நித்ய வார்த்தை, சத்ய வார்த்தை,
ஜீவாமிர்த வார்த்தை (Repeat)

2 தேவ சுதன் கொடுக்கிறார்,
ஜீவாற்புத வார்த்தை,
பாவி அன்பாய் அழைக்கிறார்,
ஜீவாற்புத வார்த்தை,
எல்லாம் இலவசம்
அழைக்குதே மோட்சம்.

3 நேச மீட்பரின் அழைப்பு,
ஜீவாமிர்த வார்த்தை,
தரும் யாவர்க்கும் மன்னிப்பு
ஜீவாமிர்த வார்த்தை.
யேசு! மீட்பர் நீரே,
என்னை ஆட் கொள்வீரே.

---

## 89

### *O Wonderful Wonderful Word*

11,8

1 ஓ, அற்புதம், அற்புதம், தேவன் வார்த்தை
மெய்ஞானம் வெளிப்படுத்தும்,
வாசிக்க, வாசிக்க, பழமையாகா,
புதுமை, புதுமை என்றும்,
வரிக்கோர் பொக்கிஷம், ஓர் சொல், ஓர் முத்து,
விரும்புவோர் பெற்றுக் கொள்ளும்

காலமும், லோகமும் கடந்து போகுமே;
தேவன் வார்த்தை என்றும் நிற்கும்.

2 ஓ, அற்புதம், அற்புதம், தேவன் வார்த்தை,
நம் வான பிதா வெளிச்சம்,
மா தயவாய்த் தந்தார் - வழியைக்காட்டி
அன்பின் கரத்துள் நடத்தும்,
அதின் புத்தி, போதனை, உண்மை, நீதி,
தீர்ப்புகள், பூரணம், சுத்தம்,

காலமும், லோகமும் கடந்து போகுமே,
தேவன் வார்த்தை என்றும் நிற்கும்.

3 ஓ, அற்புதம், அற்புதம், தேவன் வார்த்தை
அதிலேதான் நம் ரட்சிப்பு,
அது நம் உள்ளத்தை உருவக்குத்தி,
உணர்த்தி நம்மைக் காட்டுது,
ரட்சகர் காட்டுது, குருசைத் தூண்டுது,
இப்போ மாப்புக் கிடைக்குமிடம்,
காலமும், லோகமும் கடந்து போகுமே,
தேவன் வார்த்தை என்றும் நிற்கும்.

4 ஓ, அற்புதம், அற்புதம், தேவன் வார்த்தை
சென்ற அன்பர் நம்பிக்கையே,
அவர் தம் நம்பிக்கை ஊன்றின சத்யம்
யுகா யுகமாய் நிற்குமே.
ஓ, அற்புதம், அற்புதம், தேவன் வார்த்தை
மாறுது, ஸ்திரம், நிச்சயம்,
காலமும், லோகமும் கடந்து போகுமே,
தேவன் வார்த்தை என்றும் நிற்கும்.

---

**Heaven, Second Coming**

**90**

*There is a home eternal*

7, 7. 8, 7, 8, 8, ,7 7

1 உண்டாம் நித்திய வீடு,
ஜொலிக்கும் பிரகாசமாம்,
இல்லையாம் சந்தோஷம் ஈடு,
இருள் நிழலிடாதாம்,

பாடுவார் வெண்ணங்கி தூதர்,
மகிமை வெண்ணு சனம் முன்,
எப்போ, ஒ எப்போ, காண்பேன்
பேரின்ப ஆனந்த விண்.

*Ch.* வீடு, இன்பவீடு, இலங்கும் நித்யவீடு,
இலங்கும் மீட்பரின் வீடே,
ஆனந்த இன்ப வீடே

2 (களி) பூரிப் பென்றுமே ஒங்கும்
அவ்வின்ப மேல் வீட்டிலே.
பக்தர் ஓய்வின்றி முழங்கும் (தொனிக்கும்)
யேசுவுக்குத் துதியே
கூடுவேன் நான் இன்பக் கீதம்
மகிமை வெண்ணு சனம் முன்
எப்போ, ஒ! எப்போ காண்பேன்,
பேரின்ப ஆனந்த விண்.

3 வேகம் சேர்வேனே அக்கூட்டம்,
ஆகாயத் தக்கரையே
க்றிஸ்துவே என்தன் ரக்ஷண்யம்,
என் மரணம் பயமே,
நேசரை வெண்ணு சனம் மேல்
சீக்கிரம் பாக்கும் என் கண்,
அப்போ, ஒ அப்போ காண்பேன்
பேரின்ப ஆனந்த விண்.

———

## 91

### *Who, Who are these Washed in the Blood of the Lamb*

1 யார், யார் இவர் குளிர் அலையோரம்,
மௌனக் கல்லறையின் கரையோரம்,
கூவும் யேசின் ரட்சண்யம்,
இரத்தத்தால் கழுவப்பட்டே.

*Ch.* போகிறார் எருசலேமின் வாசல்களுள்ளே,
இரத்தத்தால் கழுவப்பட்டோர் ( Repeat )

2 இவர், இவரே இளம்பிராயத்தில்,
யேசைக்கண்டு ஞான வழியில்,
ருசி கண்டோர் க்ருபை வெள்ளத்தில்,
இரத்தத்தால் கழுவப்பட்டே.

3 இவர், இவரே துயர துன்பத்தில்,
ஆறுதல் சமாதானம் ஏசுவில்,
என்றும் கண்டோர் சுத்த 'தயத்தில்,
இரத்தத்தால் கழுவப்பட்டே.

4 இவர், இவரே கொடூர யுத்தத்தில்,
நிலை நின்றோர் கொடுந்தீ மத்தியில்,
யேசின் "மேல் வாரும்" கேட்பார் காதில்,
இரத்தத்தால் கழுவப்பட்டே.

5 சுகம், சுகம் என்றும் பொற்கரையிலே,
பாவம், துக்கம், மரணம் முடிந்ததே
இன்பம் இன்றும் என்றுமே,
இரத்தத்தால் கழுவப்பட்டே.

---

**92**

## *For ever with the Lord*

6686

1 மேல் வாசஸ்தலமே!
மீட்பரின் சமுகம்,
பேரொளி உன்னில் தங்குதே,
விண்ணோரின் கீதமும்,
உன்னிடம் வரவே,
என் துன்பம் ஓயுமாம்,
என் நேசர் அண்டை சேரவே,
என் வேளை சமீபமாம்.

*Ch.* சமீபமாம், சமீபமாம்
என் வேளை சமீபமாம்.

2 மேல் வாசஸ்தலமே!
என் அன்பர் எனக்காய்,
மண்ணுரையில் காத்திருந்தே,
கூடுவார் ஆவலாய்,
சந்திப்போம் பிரியோம்,
என் மீட்பர் சாயலாம்,
பொன்னகர் வீதி சேரவே,
என் வேளை சமீபமாம்.

---

## " Home "
## 93

8,6

1 வான் மாளிகை என் வாஞ்சையே,
வெண் தூதர் பொன் வீடாம்,
அங்கே என் சிநேகர் கூடுவார்,
பாவம் போய் எட்டாதாம்.

*Ch.* சந்திப்போம், பிரியோம்,
சந்திப்போம், பிரியோம்,
சந்திப்போம், பிரியோம்,
சந்திப்போம், பி--ரியோம்.

2 வான் மாளிகை என் வாஞ்சையே,
என் மீட்பர் ராஜனும்,
ஜெய வீரரின் கெம்பீரம்
ஓய்வின்றி முழங்குமாம்.

3 வான் மாளிகை என் வாஞ்சையே,
மீண்டோர் நித்ய வீடாம்,
வாடாக் க்ரீடம் அங்கி கொடி,
ஏக சந்தோஷமாம்.

4 வான் மாளிகை என் வாஞ்சையே,
சந்திப்போர் வாழ்த்துவோம்,
வீணை கீதம் உண்டென்றுமே,
பொன் வீதி உலாவுவோம்.

5 வான் மாளிகை என் வாஞ்சையே,
நேசர் வாசஸ்தலம்,
எப்போ சேர்வேன் என் ஆத்துமா,
தவிக்கும் ஸ்தாபரம்.

---

## 94

### *For ever with the Lord*

6,6,8,6

1 என்றும் கர்த்தருடன்,
ஆமென் சந்தோஷமே,
அவ்வார்த்தை மரித்தோர் ஜீவன்,
அதே சாவாமையே,
இங்கே அடைபட்டு,
அலைவேன் தூரமாய்,
நாள்தோறும் நான் இதை விட்டு,
போறேன் சமீபமாய்.

*Ch.* சமீபமாம், சமீபமாம், ஓர்நாள் சமீபமாம்.

2 பிதா வாசஸ்தலமே,
என் ஆத்துமாவின் வாஞ்சை,
சமீபமாய் விஸ்வாசமே,
காட்டும் பொன் வாசலே,
என் ஆவி ஏங்குதே,
ஆசை இடம் நோக்கி,
பரிசுத்தர் சுதந்தரமே,
எருசலேம் பதி.

3 மேகங்கள் சீறுதே,
இருளும் மூடுது,
புசல் கோஷ்டத்தால் திகைப்பே,
பேளைப் புரு இது,
ஓ, மேகம் நீங்குதே,
புசலும் ஓயுதே,
தோய்ந்த என் ஆத்துமா பார்க்கவே,
சமாதான வில்லு.

4 காலே மாலேயிலும்,
மத்தியானம் ராச்சாமம்,
லோக இரைச்சல்க்கு மேலும்,
கேட்குது வான் கீதம்,
உயிர்ப்பிக்கும் சொல்லே,
கெம்பீர சத்தமே,
என்றென்றும் கர்த்தருடனே,
ஆமென் சந்தோஷமே.

---

## 95

### *Meet me there*

7's

1 வந்துசேரு தப்பாதே,
இலங்கும் வான் லோகத்திலே,
அங்கே நம் கர்த்தர் உண்டு,
பாவம் வந்து எட்டாது,
பூர்வ நாள் இஷ்டருடன்,
மெல்ய வெண்ணக்கியுடன்,

சுத்தரின் உடையிலே,
சந்திக்க வா தப்பாதே.

2 வந்து சேரு தப்பாதே,
தொல்லை நாளுக்கப்பாலே,
துன்ப ஜீவன் முடிவில்,
சந்தி என்னை மோட்சத்தில்,
துன்பம் துக்கம் விடுவோம்,
ராஜ்யம் க்ரீடம் பெறுவோம்,
யேசு வீடாயத்தமே,
சந்திக்க வா தப்பாதே.

3 வந்து சேரு தப்பாதே.
அங்கே சாவு கேளோமே,
ஏக்கம் பெரு மூச்சில்லை,
பிரியும் கண்ணீருமில்லை,
பயம் திகில் நீங்கிடும்,
கை அன்பர் அணைத்திடும்,
யேசின் மகிமை பங்கே,
சந்திக்க வா தப்பாதே.

---

## Second Coming

## 96

### *Look Ye Saints*

8,7

1 பாரும் பக்தர்! வானக்காட்சி!
துக்க மனுஷன் இதோ,
வரும் ஜெயகோல மாட்சி,
யாரும் பணிவார் இப்போ.

*Ch.* க்ரீடம் சூடும், தூதர் சூடும்,
யேசு ராஜா, ராஜனுய் (Repeat)

2 க்ரீடம்! மீட்பர்! தூதர் சூடும்!
வாரார் கொள்ளைகளுடன்,
வல்லமை சிம்மாஸ்னம் ஏற்றும்,
வான முழக்கத்துடன்.

3 நீசர் க்ரீடம் பரியாசை,
மீட்பரைக் கேலி செய்தார்,
பக்தர் தூதர் சூழ்ந்தவரை,
"ராஜா" என்று துதிப்பார்.

4 குத்தினவர் நோக்கிப் பார்த்து,
இலச்சை திகில் நிறைந்தார்,
கோடா கோடி பக்தர் நின்று,
தொழுது ஆர்பரிப்பார்.

5 கேளும்! துதிகள் முழக்கம்,
கேளும்! ஜெய வாத்தியம்,
யேசு வீற்றுர் சிரேஷ்டஸ்தானம்,
காட்சி என்ன சந்தோஷம்.

---

**Special**
**97**
12,11,6

67747

1 இந்த மரணத்தால் வந்ததோ உணர்வு,
இந்த என் அன்புதான் தட்டும சத்தத்தால்,
இன்றைக்கே திரும்பு.

2 த்றந்த குழியை நீ திரும்பவும் பார்ப்பாயோ,
"திரும்பு" என்றவர் சொல்லக்கேட்ட நீ,
சா நாள் அறிவாயோ.

3 பாவ நாள் கழிந்து கோப நாள் வருமே,
சாபம் நீக்கும் சமயம் இன்றறிந்து,
தாவும் யேசு பாரே.

4 பணமோ, கல்வியோ, ஆஸ்தியோ, மேன்மையோ,
கணக்குப்பார்க்குங்கால் இதெல்லாம் நிலையோ,
பிணம் நீ ஆகாயோ.

5 உன்பிதா வீடங்கே, உன் ரட்சகரங்கே,
என்யேசுவின் மக்கள் சுத்தராமங்கே,
இன்னும் ஏன் வெறுப்போ.

6 பாவியே துரோகியே! பாவங்கள் போக்கவே,
விண்ணை விட்டவரே உன்னை ஈடேற்றினர்,
மண்ணறை தங்கியே.

7 நானே உயிர்த் தெழுதல், நானே நித்ய ஜீவன்,
என்ற என் நேசரை நீ விஸ்வாசிக்க,
அண்டுவனோ எமன்? (மர்ணம்)

8 அன்புள்ள யேசுதான் அக்கரை நிற்கிறார்,
இக்கரைவிட்டவர் பக்கம் நீசேர,
தக்க நாள் இதுவே.

---

## Farewell.

## 98

*God be with you,*

9's 9

1 தேவன் காத்துக்கொள்வார், சந்திப்போம்,
தம் ஞானத்தாலே நடத்தி,
சோதனைக்குன்னை விலக்கி,
தேவன் காத்துக் கொள்வார், சந்திப்போம்.

*Ch.* சந்திப்போம், சந்திப்போம்,
நேசர் வீட்டில் சந்திப்போம்,
சந்திப்போம், சந்திப்போம்,
தேவன் காத்துக்கொள்வார், சந்திப்போம்.

2 தேவன் காத்துக்கொள்வார், சந்திப்போம்,
செட்டைகளின் கீழ் மறைத்து,
மன்னாவால் தினம் போஷித்து,
தேவன் காத்துக்கொள்வார், சந்திப்போம்.

3 தேவன் காத்துக்கொள்வார், சந்திப்போம்,
கஷ்ட நஷ்டங்கள் நேரிடில்,
அணைத்து அன்பின் காத்தில்,
தேவன் காத்துக்கொள்வார், சந்திப்போம்.

4 தேவன் காத்துக்கொள்வார், சந்திப்போம்,
அன்பின் கொடியாலே மூடி,
சாவின் திகில்களை ஒட்டி,
தேவன் காத்துக்கொள்வார், சந்திப்போம்.

---

## 99

"அவன் என்னிடத்தில் வாஞ்சையாயிருக்கிறபடியால்" (Ps. 91:14)

8,6

1 மூவருடன் அக்கினியில்,
உளாவி ரட்சித்தீர்,
மூர்க்கர், பகைஞர், மத்தியில்,
வல்லமை காட்டினீர்.

*Ch.* இப்போதும் மாறா தேவனே,
ஏழைகள் நம்பினோம்,
துன்பம் கஷ்டம் இருள் நீக்கும்,
உம் பர்தம் அண்டினோம்.

2 சிங்கத்தின் வாய்க்குத் தாசனை
ஒப்புக் கொடாமலே,
காத்தீர் திக்கற்றோர் தேவனே!
இது உம் பேரன்பே.

3 " சிங்கம் பசியால் வருந்தும்,
என்னைத் தேடினோர்க்கோ,
வேண்டும் நன்மைகள் ஏதுவும்,
குறை படாதல்லோ "

---

## 100

*Master, the tempest is raging*

8,7

1 ராயரே! புசல் சீறுது,
அலைகள் புரளுதே,

காரிருள் எங்கும் மூடலாச்சே,
புகல், கெதி இல்லையே,
மாள்கிறேம் கவையில்லையோ?
தூக்கமும் தான் வருதே,

ஒவ்வோர் நிமிஷமும் கடல் சீறி,
விழிங்கிடப் பார்க்குதே.

*Ch.* 'காற்றும், கடலும் எனக்கடங்கும்' மார்ந்திரும்,
புசலால் கோஷ்டிக்கும் கடலும்,
பிசாசுகள் மனுஷர் ஏதென்றாலும்,
கடல், பூமி வானராஜன் தங்கும்,
கப்பலை விழுங்கா எத்தண்ணீரும்
சமூலம் என் சித்தம் அடங்கும்.
'மார்ந்திரும்......' மார்ந்திரும்,
சமூலம் என் சித்தம் அடங்கும் ..அம-ர்-ந்திரும்

2 ராயரே! சஞ்சலத்தாலே,
இன்றென் மனம் நோகுதே,

நொந்த இதயம் கலங்குது,
உணர்த்தி ரட்சியுமே,
பாவ சஞ்சல, வெள்ளங்கள்
ஆத்மா மேலே பாயுதே,
நான் சாகிறேன், ச்ரகிறேன், ராயரே,
சீக்கிரம் தூக்கிடுமே.

3 ராயரே! திகில் நீங்கிற்றே,
கோஷ்டமும் அமர்ந்தது,
சூரியன் தடாகத்தில் தோன்றி,

மோட்சம் நெஞ்சில் வந்தது;
நில்லும்! அருமை மீட்பரே!

தனியாய் விடாதேயும்,
பூரிப்பாய் (இன்பக்கரை) அக்கரை சேர்ந்து
சுகிப்பேன் அங்கேயும்.

---

## 101

75

1 ஏழை ஆத்ம நேசரே!
வேளை புசல் கோஷ்டமே,
காரிருளும் மூடுது,
நேரும் மோசம் சூழுது,
இந்த நேரம் இரங்கும்,
சொந்தமல்லோ! ரட்சியும்;

2 நிந்தை சாவு என்றாலே,
நொந்து நீர் சகித்தீரே;
சாபம் நீக்கி ரட்சித்தீர்
பாவம் மூடி மன்னித்தீர்;
ஏசுவே! உம் ரத்தமே
நீசன் எந்தன் கெதியே.

3 "தஞ்சம் நானே" என்றீரே,
வஞ்சிப்பீரோ? தேவனே!
கடல் காற்றமர்த்தினீர்,
இடர் நீங்க ரட்சித்தீர்,
என்றும் மாறா யேசுவே,
இன்று ஏழை மீளுமே.

4 யோபின் தேவா! நீர்தாமே,
ஆபத்தில் என் துணையே,
"மனம் மாறேன்" மன்றுடே,
"சினம் வையேன்" என்றீரே,
உள்ளம் தத்தளிக்குதே,
தள்ளுவீரோ? தஞ்சமே.

5 இருளில் வெளிச்சமே,
மருளாமல் காருமே,
வழியொன்றும் காணேனே;
வெளியெல்லாம் புகையே;
நாசம் அணுகாமலும்,
யேசு மீட்பா நடத்தும்.

6 துன்ப வெள்ளம் மோதுதே
அன்பின் செயல் அண்ணலே;
நெஞ்சில் பயம் தோன்றுது,
கெஞ்சும் ஆத்மா சோருது;
பயம் ஐயம் நீக்கியே,
ஜெயம் தாரும் யேசுவே.

7 ஜெபம் கேட்கும் தேவனே,
சாபம் ரத்தம் நீக்கிற்றே,
ஏழை சஞ்சலம் பாரும்;
வேளையில் இரங்கிடும்;
யேசுவின் நிமித்தமே
தாசன் விடுவியுமே.

---

## New year

### 102

8,6

1 பிதாவே, இம்மட்டும் காத்தீர்,
இது உம் பேரன்பே,
அடியார் இக்ருபைக் கெல்லாம்,
முற்றும் அபாத்ரமே.

*Ch.* திரியேகரே, ஸ்தோத்ரம்,
திரியேகரே, ஸ்தோத்ரம் — நான் உம்
பாதம் பணிகிறேன்,
என் ஆவி ஆத்மா தேகமும்,
நீர் ஆளும் நான் தாரேன்.

2 சென்றநாள் (ஏழைகளை நீர் or) உம் பிள்ளை
அன்பாய் போஷித்திரே, [களை,
வந்த பெரும் துன்பம் சாவு,
விலக்கிக் காத்தீரே.

3 அக்கினியில் எங்களுடன்,
உலாவி ரட்சித்தீர்,
நீரே எங்கள் தேவன் என்று,
இத்தாலே ரூபித்தீர்,

4 ஏழைகள் உமது வாக்கை,
நம்பி பிடிக்கிறோம்,
க்ருபாசனத் தண்டை இதோ,
பணிவாய் நிற்கிறோம்.

5 இம்மட்டும் நாங்கள் உம்மையே,
பற்றிக் கொள்ளச் செய்தீர்,

இன்னமும் என்ன நேர்ந்தாலும்,
நீர் கைவிடமாட்டீர்.

6 கடைமட்டும் எங்களை நீர்,
கண்மணிபோல் காரும்,
கஷ்ட சாகரம் தாண்டியே,
வீடு கொண்டே சேரும்.

---

## 103

Tune: *Who is he?*

1 ஏழை நான் திக்கற்றோனே,
என்னை நீர் கண்ணோக்குமே.

*Ch.* சொன்னீர் மாறா தேவ சேயே,
"போதும் என் க்ருபை உனக்கே,
உன் பெலவீனத்திலே,
எந்தன் பலம் பூர்ணமே".

2 என் பாவம் பொறுத்து நீர்,
நீக்கி மூடி ரட்சித்தீர்.

3 அக்னி வெள்ளம் நடுவில்
மூடி நின்று உலாவயில்.

4 மரண இருள் தோன்றயில்,
அணைத்து அன்பின் கரத்தில்,

*Special between 4 & 5*

ஆபத்தை விலக்கினீர்,
பாலனைக் கடாட்சித்தீர்.

5 க்ருபை, க்ருபை, க்ருபையே
முற்றும் நான் அபாத்ரமே

*Ch.* என் நிமித்தம் கைவிடேனே,
போதும் என் க்ருபை உனக்கே,
உன் பலவீனத்திலே,
எந்தன் பலம் பூர்ணமே.

6 ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம், ஸ்தோத்ரமே,
திரியேகரே, உமக்கே.

7 இம்மட்டும் உம் ஜெயமே,
அந்தம் மட்டும் காருமே.

*Ch.* இரத்தத்தால் உனைக்கொண்டேனே,
என்றும் சொந்தமாக்கினேனே,
திகிலேன், திடன் கொள்ளேன்,
முற்றும் காத்துக்கொள்ளுவேன்.

---

**104**

10

1 இரட்சகா, ஆசீர்வதியும்,
இளைப்பாறப் போகுமுன்,
இதோ என் குறை காயமும்,
மன்னித்து ஆற்றும் என் புண்.

2 பொல்லாப்பு சுற்றித் திரிந்தாலும்,
ஆபத்து மேல் மறந்தால்,

சுகம் தூதர் காவல் தந்தும்,
நீரும் பக்கம் இருந்தால்,

3 இருட்டென்மேல் மூடினாலும்,
உம்மை விட்டு மூடாதே;
நீர் தளரீர் ஒருக்காலும்,
உம் ஜனம் காப்பதிலே,

4 இன்றிரவு எமன் வந்தால்,
மமத்தை மாறி குழியாமே,
மோட்சக்கரை விழிக்குங்கால்,
சாவாமை என் உடையே.

---

## 105

*Just as I am*

8, 8, 8, 6

1 இன்நேரமே வெறுமையாய்,
அன்பு சந்தோஷம் அற்றோனாய்,
மோட்சம் தகுதி இல்லானாய்,
ஓ! பாவியே நீ வா.

2 பாவப் பாரம் தள்ளின்றோ,
உலகம் நம்ப ஆபத்தே,
சஞ்சலம் நீக்குவார் கிறிஸ்தே,
தளர்ந்த பாவி வா.

3 சிலுவையண்டை பாரம் போடு,
ஆதாயம் களிம் பென்றெண்ணு,

கிருபைக்கு நஷ்டம் சொற்பம் நம்பு;
புகலற்றோனே வா.

4 பயம் யாவும் நீ கொண்டுவா,
நொந்த இதயம் கண்ணீரா,
கிருபையின் சத்தம் கேட்குதா
(or க்ருபை அழைப்பைக் கேட்டாயா)
சஞ்சலப் பாவியே! நீ வா.

5 ஆவி மணையாட்டி கேள் "வா"
மீட்டோரின் கெம்பீரமும் "வா"
தவித்திளைத்தோன் மனமா
ரட்சகர் அழைக்கிறார் "வா"

---

## 106

Tune *I will sing of my Redeemer*

8' 7

1 என் மீட்பரைப் போற்றுவேனே,
என்ன அன்பென்மேல் வைத்தார்;
நீசச் சிலுவை சகித்து
நாசம் நீக்கி ரட்சித்தார்.

*Ch.* போற்றும் போற்றும் யேசுவையே,
ரத்தத்தால் மீட்டுக்கொண்டார்;
சிலுவையில் மரித்தெதன்னை,
கடன் தீர்த்து "போ" என்றார்.

2 என்றும் சொல்வேன் மீட்பர் நாமம்,
ஒன்றுமில்லா திக்கற்றோனே;

எல்லையில்லா மா கருபை வெள்ளம்,
கல் நெஞ்ச நீசன் மீட்டதே.

3 போற்றுவேன் என்னை மீட்டோரை,
அவர் வல்லமை கீதம்;
பாவம் மரணம் நரகத்தின்மேல்,
தாரார் எனக்கு அவர் ஜெயம்.

4 போற்றுவேன் என்னை மீட்டோரை,
அவர் புரம அன்பையும்,
மரணம் நீக்கி ஜீவன் தந்தார்,
தேவனோடிருக்கவும்.

---

## 107

8, 6

1 ஏசின் ரத்தம் அருமையாம்,
நானும் ருசிக்கிறேன்;
அதினால் பயம் நீங்கியே,
இப்போ பூரிக்கிறேன்.

*Ch.* ஓ! ஒப்பில்லா க்ருபை வெள்ளம்,
நேசரில் ஓடுதே;
மோட்சத்திலும் திவ்ய ரத்தம்,
ஓயா என் கீதமே.

2 தேவ வாக்கு எனக்குண்டு,
பாவம் நினையேனே;
மாண்டா ரென் மைந்தன் பாவிக்காய்,
மன்னிப் பளிக்கவே.

3 என் பாவங்கள் முன் வந்தாலும்,
ஏன் திகில் பயமே
ரத்தமென் பிராய சித்தமே,
என் குற்றம் நீங்கிற்றே.

4 என் சரீரம் வியாதியால்,
கீழே படுக்கையில்,
ரத்தத்தால் சமாதானமாய்,
கண் மூடுவேன் சாவில்.

---

**108**

**8**

1 ஏசு ஏற்றுக் கொண்டாயா ?
இன்னும் தான் செய்வாரே,
அவர் க்ருபை பெற்றாயா ?
இன்னும் தருவாரே,
பிதாவின் க்ருபை, ஓ, இன்பம்
இன்னும் ருசிப்பாயே,
அவர் ஈவு இலவசம்,
இன்னும் பொழிவாரே.

*Ch* இன்னும் மேல், இன்னும் மேல்
என்றும் பொழிவாரே.
ஓ ஒப்பில்லா பேரன்பு,
இன்னும் பொழிவாரே.

2 நேசர் உன் பக்கத்திலா ?
இன்னும் உணர்வாயே,

அவர் சமுகம் தேற்றுதா ?
இன்னும் மகிமையே,
ஏசின் அன்பு மாருசி,
இன்னும் ஆனந்தமே,
இலவசம் தீங்கனி,
இன்னும் கிட்டாதே.

3 வல்ல ஆவி உணர்ந்தாயா ?
இன்னும் அபிஷேகமே,
அக்னி நாவமர்ந்ததா ?
இன்னும் அறிவாயே,
தேவன் ஆவி வல்லமை
இன்னும் நீ பார்ப்பாயே;
அவர் ஈயும் தன்மை
இன்னும் க்ருபையே.

---

## 109

8, 6

*The Morning Bright*

1 காலை சூரியனின் கதிர்
தூக்கம் தூரத்திற்றே;
பிதாவே, உந்தன் அன்புதான்
சிறுவன் காக்குதே.

2 நாளெல்லாம் நானே ஜெபிப்பேன்,
நீர் காவல் முன் செல்லும்;
மன்னியும் பாவம் — ஜீவிப்பேன்
யேசுவே உம் பக்கம்.

3 ஓ வாரும் உள்ளம் தாங்கிடும்,
கிருபையின் ஆவியே;
உம்மைப்போலாக்கும் அப்போ நான்
உம் சமுகம் பார்ப்பேன்.

---

## 110

Tune: *When I survey the wondrous Cross*

8

1 கை விரித்தே சிலுவையில்
இரத்தம் வேர்வை மண் புரண்டே;
தொங்கும் விண் ராஜனை மரத்தில்
பார்! தோய்ந்து மைந்தன் மாள்கிறாரே.

*Ch.* சிலுவையில் உதிரம் சிந்தி,
தொங்கி மரித்தார் தேவ மைந்தன்;
ஆனால் எழுந்து என் இதயத்தில்,
தங்கி சமாதானம் தாரார்.

2 தாங்கக்கூடா என் பாரமே,
தேவா உமது மேல் வீழ்ந்ததே;
நான் குணம்பெற என் நோவேற்றீரே,
என் பாக்யம் நீர் சாபம் ஆனதே.

3 உம் அன்பை நான் பிரஸ்தாபிப்பேன்,
பெரும் கடன் தீர்ப்பதெப்படி?
என் ஆவி, தேகம், சர்வாங்கம் தாரேன்;
உம் மகிமைக்கே, உம் சொல்படி.

4 என்ன தந்தாலும் சொற்பந்தான்,
என்ன செய்தாலும் மாகுறைவே;
உம் அன்பும் சிலுவை துயரும்தான்;
என் நெஞ்சில் பதிய நீர் செய்யுமே.

5. கல்வாரி மேட்டில் நேசர் மரித்தார்,
அங்கே மரத்தில் கர்த்தர் தொங்கினர்;
அங்கே உதிரம் எனக்காய் சிந்தினர்,
இலவச மீட்பை வாங்கினர்.

6 கல் பிளக்க புவி இருள்
நேசர் தலை சாய்ந்து மரிக்க,
பீறுண்ட திரைதான் காட்டுதே,
பேரின்பம் நித்ய பகலே.

7 ஏசு கர்த்தரே இம்தவ்வாறே,
உம் ஜீவன் எனக்காய்த் தந்தீரே;
இவ் வியாகுலம் நிந்தை சிலுவையில்
சகித்தீர் இருள் கல்வாரியாலே.

---

## 111

*I hear thy welcome voice*

9

1 தேவா அன்பின் சத்தம்,
உம் பாதம் இழுக்குதே;
கல்வாரி திரு ரத்தத்தில்,
என்னைக் கழுவவே.

*Ch.* தேவா நான் வாரேன்,
இதோ பாதத்தில்,
கழுவி சுத்தம் செய்யுமேன்,
கல்வாரி ரத்தத்தில்.

2. ஏழை அசுத்தனே,
கிருபை தாரீரே;
திட்டறக் கழுவுகிறீர்,
பஞ்சிலும் வெண்மையே.

3 இயேசென்னை அழைக்கிறார்,
விஸ்வாசம் அன்பிற்கே,
ஆவியின் கனிகளெல்லாம்,
இக பரத்துக்கே.

4 இயேசுவே ஸ்திரம் செய்வார்,
என்னில் அவர் க்ரியை,
கிருபை மேல் க்ருபை காட்டி,
அழிப்பார் பாவத்தை.

5 அவரே சொல்லுவார்,
உத்தம ஆத்மத்தில்,
வாக்கெல்லாம் நிறைவேறுமே,
வாவேன் விஸ்வாசத்தில்.

6 வாழ்க திரு ரத்தம்,
வாழ்க தேவக்ருபை,
வாழ்க தேவனின் கிறிஸ்து,
என் நீதி நம்பிக்கை.

---

## 112

*Sinners Jesus will receive*

7s

1. பாவியை ஏசு ஏற்பார்,
க்ருபா செய்தியார்க்கும் சொல்,
வீழ்வார் வான் நெறிவிட்டார்,
சோர்வார் யாரும் கேட்கச்சொல்.

*Ch.* பாடும் கெம்பீரம் பாடும்,
கிறிஸ்து பாவியை ஏற்பார்,
செய்தி தெளிவாய்க் கூறும்,
கிறிஸ்து பாவியை ஏற்பார்.

2 வா! தருவார் ஆறுதல்,
நம்பு! வாக்குத் தெளிவே,
மீட்பர் செத்தோர் பாவத்தில்,
ஏற்பார் பாவிகளேயே.

3 மனசாட்சி சுத்தமே,
பிரமாண முன் நீதியாய்,
என்னை சுத்தம் செய்தோரே,
திருப்தி செய்தார் முற்றுமாய்.

4 கிறிஸ்து பாவியை ஏற்பார்,
நீசப் பாவி என்னையும்,
மோட்சம் தம்முடன் சேர்ப்பார்,
கழுவி சமூலமும்.

---

## 113

8, 7,

1 போற்றுவேன் வான் ராஜனேயே,
பாதம் வீழ்ந்து பணிவேன்,
ரட்சை பெற்று அவரையே.

போற்ற சுவிகாரம் பெற்றேன்;
போற்றுவேனே, போற்றுவேனே
என் நித்ய ராஜனேயே.

2 போற்றுவேன் தயை க்ருபைக்கு,
பிதாக்களின் நெருக்கத்தில்
இன்னும் என்றும் நம்பினோர்க்கு,
மாறார் அன்பு நீதியில்,
போற்றுவேனே, போற்றுவேனே,
அவர் நாமம் உண்மையே.

3 பிதாவைப்போல பேணிக் காப்பார்,
என்னுருவம் அறிவார்,
தன் கரத்தில் தாங்கி மீட்பார்,
சகல சத்ரு ஜெய்ப்பார்,
போற்றுவேனே, போற்றுவேனே,
க்ருபா வெள்ளம் பாயுதே.

4 தூதரே தொழுது காட்டும்,
ராஜன் முகம் பார்க்கிறீரே,
சூர்யன் சந்திரன் வீழ்ந்து தொழும்,
சர்வ லோக சிருஷ்டியே!
போற்றுங்களேன், போற்றுங்களேன்,
கர்த்தரை என்னுடனே.

---

## 114

### *Yield not to tenptation*

11s.

1 லோகத்தில் துன்பங்கள் அதிகமுண்டு,
லோகத்தை ஜெயித்தேன் கல்வாரி நின்று,
பயப்படாதே என்னில் நீ நிலைத்திரு,
நீயும் ஜெயங்கொள்வாய் என் வார்த்தை நம்பு.

*Ch.* என்னிடத்தில் நீ சொல்லு,
வேண்டும் யாவும் நான் செய்வேன்,
உன் பாரம் என்மேல் போடு,
நீக்கி விடுவிப்பேன்.

2 உன்னை நான் கை விடேன், உன்னை மறவேன்,
ரத்தத்தாலே மீட்டேன் விட்டும் விலகேன்,
என் நாமம் 'சத்தியம்' மாறவே மாட்டேன்,
என் கரத்தில் தாங்கி காத்துக் கொள்ளுவேன்.

---

## 115

11s

1 வானம் பூமி ஒரு காலம் அழியும்,
எந்தன் வார்த்தை என்றென்றும் நிலை நிற்கும்.

*Ch.* நேச யேசு என்னை என்றும் கை விடார்,
நான் மாறினலும் அவர் ஓர் போதும் மாறார்.

2 தேடினலப்போ உன்னிடம் நான் சேர்வேன்,
கேளப்போ என் சித்தம் நன்மை நான் தாரேன்.

3 பாவப் பாரம் நீக்க நான் வந்தேனல்லோ,
சாபம் நீக்கி பரதீஸ் நீ வாராயோ.

4 நான் விலகி உன்னை விட்டுப் போய் விடேன்,
என்ன நேரிட்டாலும் அப்போ நோக்கிடேன்,

5 என் பிதா என்னை உனக்குத் தந்தாரோ,
என்னுடன் எல்லாம் உனக்கு ஈயாரோ.

——:○:——

# PART II

## 1

சதா "அன்புருவாய்," "சத்யம், ஜீவன்," "நிறை ஒளியாய்",
"பிதா" "ஆவி" "சுதன்" ஒன்ருகிய திரித்துவரே",
தேவே! "தாரகமாய்" "சர்வவல்லமை" ஞானமுமாய்,
தாமே "பூரணராய்" திகழ்கின்ற "பரிசுத்தரே",
சர்வம் சிருஷ்டிகரே ஒரு ஒப்பள வற்றவரே,
சர்வம் பாதுகாக்கும் நீதியுள்ள தயாநிதியே
தேவே! சற்குருவாய், தன்னைத் தந்தென்னை மீட்டவரே.
கோவே, நின்னருளால், என்னையாளுந் தயாபரரே,

## 2

யாருந்துணையில்லை, எந்தன் தேவா, நீர்தான் கெதியே,
தாரும் உம் கிருபை, திக்கற்றேழை திகைக்கின்றேனே;
தேவா! பாவத்தில் நான் மனம்போனவழி நடந்தேன்;
மூவா! உம் கிருபை, அழியாமலுங் காத்ததுவே,
பாவ பாதையில் நான் அறியாமலே செய்ததெல்லாம்;
தேவே! நீர் அறிந்தும் தெரியாதவர்போலிருந்தீர்;
அன்னே! உம்மாவியால் உணர்த்தியே திருப்பி என்னை
அன்பின் நேசரண்டை இழுத்தென்னை நீர் ஆட்கொண்டீரே.

## 3

பாவம் எத்தனையோ! துரோகங்களும் எத்தனையோ!
சாபந்தீர்த்த ரத்தம் பாவமத்தனையும் போக்கிற்றே;
துக்கமெத்தனையோ! துன்பம், கஷ்டங்கள் எத்தனையோ!
பக்கம் நின்று என்னை பாதுகாத்தே 'நீர் தாங்கிவந்தீர்';
யேசின் ரத்தத்தினுல் எந்தன் "ஆவி", "ஆத்துமா",
"தேகமும்"
மாசறக் கழுவி, சுத்த ஆவியால் தேற்றி வந்தீர்;

இன்னுஞ் சஞ்சலங்கள், அடியேன் மனம் பிடிக்குதே;
அன்னே நின்னருளால், அவை நீக்கி ஆறுதல் தாருமேன்.

4

"நானே உந்தன் மீட்பு," திகிலேன்! நீ பயப்படாதே;
நானே உன் ஜீவனே, உந்தன் நீதி பரிசுத்தமே;
வானம் பூமியுமே அழிந்தாலும் போய்விடுமே
வானவன் வார்த்தையோ! ஒருகாலுமே மாறாதே;
உன்னைக் கைப்பிடித்த அந்தநேரமே வாக்களித்தேன்;
உன்னோடென்னாளுமே நானிருப்பேன் முடிவுமட்டும்;
என்னாலாகாதது ஏதும் உண்டோ? நினைத்துப்பாரேன்;
என்னால் வேண்டும்யாவும் என்னைக்கேட்டிடப் பெற்றிடுவாய்.

5

அப்பா! உம் கரத்தில் இந்ததூரமே தூக்கிவந்தீர்;
எப்போ! நின் சாயலில் சமுகமே நின்று துதிப்பேன்;
என் நாள் உம் கரமே, எந்தன் 'நித்ய' ஜீவனும் நீரே;
என் பாவம் பிறின நின் கரம் இப்போ என் தஞ்சமே;
அப்பா! பின்னடியார் உம்மில் என்றும் செழித்திருக்க,
எப்போதும் கிருபை பொழிந்தே உம்வழி நடத்தும்;
யாக்கோபின் தேவனே, விசுவாசிகளின் நேசரே,
ஏக்கமுடனிடும் ஏழை சத்தமே கேட்டிரங்காய்.

6

மரணத்தின் திகிலால், எந்தன் மனம் பேதலிக்காமல்,
"சரணம்" என்ற ஏழை, ஆவி தேற்றி வழி நடத்தும்;
"மாலை" நித்திரைநேரம், என் பிதாக்களுடனே தூங்கி,
'காலை' உம் முகமே, நானும் காண எழுந்திருக்க
பேச்சொடுங்கும் நேரம் ஏழைப்பக்கமே நில்லும் ஐயா;
மூச்சொடுங்கும்வேளை, எந்தன் 'ஆவி' நீர்ஏற்றுக்கொள்ளும்;

கண்மின் மங்கும்போது 'மீட்பர் சாயலால்' தேற்றுமய்யா;
மண்ணினுசை பாசம் அணுகாமலே யோட்டுந்தேவா.

7

அஞ்சாதே பிள்ளையே! என்னநேர்ந்தாலுமென்னை நோக்கி,
"தஞ்சம்" என்றடைந்தோர், நானோர்காலும் கைவிட்டதில்
உன்னை என் ஜனமாய், ஆக்கிக்கொள்ளப் பிரியங்கொண் [லே;
பின்னே கைவிடவும், தள்ளிடவும் நான் மாறுவேனோ; [டேன்
சந்தேக பயத்தால், சற்றேனுங் கலங்கிடாமல்
எந்தன் வார்த்தை நம்பு, ரத்தம் சிந்தினேன் உன்னை மீட்க,
என் கிருபை போதும், உன்னைக் "காரிருள்" மூடும்போது,
'உன் பெலவீனத்தில்' 'என் கிருபை' ஜெயந்தருமே.

8

க்ருபை, க்ருபை தேவா! எந்தன் 'ஜீவகாலம்' க்ருபையே;
க்ருபை, க்ருபை எல்லாம் எந்தன் ரட்சிப்பும்நின் க்ருபையே;
தேவ நீதிகேோதான், சுதன் சாவாலே தப்பிக்கொண்டேன்;
தேவ க்ருபையோதான் எங்கே போனாலு மெட்டுதய்யோ;
க்ருபை க்ருபை என்றும் நான் முற்றிலும் அபாத்திரமே;
க்ருபை, க்ருபை வெள்ளம் இன்றும் என்மேல் புரளுதய்யோ;
ஏழைப் பாவியை நீர் இன்னுந் தாங்கியே ஆண்டு கொண்டு,
"வேளை இப்போ விருள்", "ஒளி" தந்தென்னைக் காக்கவே
[ண்டும்.

9

வாக்கு, அக்னி, தண்ணீர் ஊடே போனாலுஞ் சேதமின்றி,
காக்க உன்னுடனே நடப்பேன், நீ பயப்படாதே;
உன் போல் எத்தனைபேர் பலவீனராய்த் தத்தளித்தார்;
என்மேல் பாரம் போட்டு இளைப்பாறுதல் கண்டடைந்தார்;

உன்னைக் "கண்விழிபோல்", நானே காக்கவும் ஏற்றுக்
[கொண்டேன்;
பின்னே சஞ்சலமேன், வார்த்தைசொல்லியும் வஞ்சிப்பேனே;
எந்தன் ரத்தம் நோக்கு சத்துருக்களெல்லாம் ஜெயிப்பாய்
உந்தன் "விசுவாசம்" 'ஜீவக்ரீடமுந்" தான்றருமே.

10

அஞ்சாதே நெஞ்சமே! தேவமைந்தன்தான் உன் மீட்பராம்;
"தஞ்சம்" "கேடகமும்", அவர் "நாமமும்", "ரத்தமுமாம்";
'பாவம்' 'நோய்', 'மரணம்' 'சஞ்சலங்களும்' இக்கரையே
"சாவாமை" 'மகிமை' 'இன்ப கீதமும்' அக்கரையில்;
"மரணமே! கூரெங்கே! பாதாளமே! உன் ஜெயமெங்கே"
மரணாதிபதியை, யேசின் ரத்தத்தால் வென்றிடுவேன்;
யேசின் "எக்காளமே" எழுப்பும் அவர் நேசரையே,
மாசில்லாரின் கூட்டம் "இனி என்றும் கர்த்தருடனே".

11

தேவி மக்களுமே "கிழன் போனுலுஞ் சிலாவத்தென்பார்";
பாவி திக்கற்றோனே, யேசுநேசர் கைவிடமாட்டார்;
மன்ன! உம்மடிமை, மனம் நைந்தே மயங்குகிறேன்;
அன்னே உன்னையல்லால் எனக்கார் துணை யார் கெதியே;
நீரே என் 'செல்வமும்,' 'என் சுகம்' 'மேன்மை' 'சந்தோஷ
நீரே 'போதகனும்' 'நல்ல மேய்ப்பனும்' 'மீட்பருமே'; [மும்';
நீரே என் 'துருக்கம்' 'எந்தன் கோட்டையும்' 'கேடகமும்';
நீரே என் 'ஜெயமும்' எந்தன் 'ரட்சிப்பின்' 'தேவனுமே'.

12

வான் புவி சர்வமும், அழிந்துபோய் தோன்றி அழியும்;
வான் லோகாதிபதி என்றும் மாறாத நித்தியராம்;

ஜீவனே புகையாம்; ஜீவகாலமோ புல்லின் பூவாம்;
ஜீவக்ரீடம் பெற நித்யஜீவனை யண்டினேனே;
இங்கே நான் பாவியே ஏழையானாலும் மீட்கப்பட்டேன்;
அங்கே சத்தியமே, யேசுவுடன் தேவசுதந்தரன்; [திரமே
ஸ்தோத்ரம் ஸ்தோத்ரம் தேவா ஜீவகாலமெல்லாம் ஸ்தோத்
ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம் பாடி, எங்கள் நித்தியமே சுகிப்
போம்.

**2**

1 தேவ மைந்தா! உந்தன் ஜீவன் தந்து என்னை
ஜீவ பிதாவண்டை சேர்த்துக்கொண்டீர்;
"சாவினதிபதி" சண்டாள "சாத்தான்" மேல்
"ஆவியால் என் ஜெயம் தந்திடுவீர்.

2 என்னை சிருஷ்டித்த தேவரீரேயல்லால்,
பின்னை என் ரக்ஷகர் வேறுமுண்டோ;
மன்னா! நீர் என் வேஷம் பூண மனதில்லால்,
இன்னே என் ரட்சிப்புக் கிட்டிடுமோ?

3 என் மனஞ் சோர்ந்து பொறி கலங்கி இன்னும்,
நன் மனங் கெட்டு நசித்திடாமல்,
கன்மலை யேசுவே! நின் கருணையாலே,
பொன்னகர் சேர்த்திடுந் தப்பிடாமல்.

4 உத்தமமாயத் தேடும் பக்தரின் பக்கமாய்,
நித்தம் க்ருபை பெலன் காட்டிடவே,
கர்த்தாவே! உம் கண்கள் சோர்ந்திடாமல் இன்னும்
நித்தம் 'புவி எங்கும் உலாவு' தாமே.

5 என்னையும் உத்தம ஆவியாலே உம்மை,
எந்நேரமுமே நான் கிட்டிடவே;

அன்னே! கிருபையால் எப்போதும் ஆண்டிடும்;
பின்னே வழி ஏதும் காண்கிலேனே.

6 "நானே வழியும் சத்யமும் ஜீவனுமே";
"நானே நல்மேய்ப்பன், ஜீவப்பமுமே";
"நானே உன் ஞானமும் நீதியும் சுத்தமும்";
"நானே உன் மீட்பரும், தேவனுமே."

7 என் வார்த்தை காத்து நடந்தவரை நானும்,
என் வார்த்தையின்படி நான் வரச்சே,
என் பிதா ராஜ்ஜியம் சேர்த்துக்கொண்டுமல்லால்,
என்னோடென்றென்றும் வைத்துக்கொள்வேனே.

8 தாயின் வயிற்றிலுருவாகும் போதென்னை,
நாயனே! உம் கண்கள் நோக்கினதே,
'நாயின்' மேல் இத்தயை நீர்வைத்து காத்திட,
பாவி நான் முற்றும் அபாத்திரனே.

9 "பாவிகளில் பிரதான பாவி" யென்று
பாவி பவுலுந்தான் சொல்லினரே,
பாவக் கணக்கிலே பந்தயம் போட்டாலோ,
பாவி என்னில் 'பாதியும்' இாரே.

10 பாவத்தை நீக்கினீர்; பாவங்கள் மன்னித்தீர்;
சாபமாகி செத்துயிர்த்ததினால்,
பாவிக்கு உம் 'சாயல்' தந்து ஈடேற்றவே,
'ஆவியை' த்தந்தீர் மேலேகினதால்.

11 பாவம் "பாழாக்கும் வனாந்தரத்தில்" என்னை,
தேவா! நீர் கண்டு கைதூக்கி வந்து,
பாவங்கள் மன்னித்து ஆவியால் போதித்து,
மூவா நடத்துநீர் "கண்போல்" காத்து.

12 நீரே இதுமட்டும் காத்து வந்தீர் இன்னும்
நீரே தான் காரும் முடிவுமட்டே
நீரே வாக்குத் தந்தீர் "காத்துக்கொள்வேன் நம்பு"
நீரே "உயிர்த்தெழுதல், ஜீவனுமே".

13 "எங்க இருளிலே நீ இருந்தாலுமே
உந்தன் ஒளியாயிருப்பேன் மெய்யே
உந்தன் பெலமேதான் நான் அறிவேன் கேள் என்
சொந்தமானாலும் நீ 'பூமண்' தானே.

14 "நானே உன்னை உருவாக்கினதும்—உன்மேல்
நானே தான் பிரியமும் வைத்தேனல்லோ?
நானே ரத்தம் சிந்தி மீட்டுக்கொண்டும்—பின்னால்
நானே கைவிட்டு மறப்பதுண்டோ?

15 "உந்தன் கர்த்தர் நானே: காத்துக்கொள்வேன்—மே
சொந்தப் பண்ணையல்லோ! நீர்ப்பாய்ச்சுவேன்; [லும்,
எந்த இருள் நாசம் கிட்டாமலே—"எந்தன்
நந்தவனத்தை" நான் பார்த்துக்கொள்வேன்"

16 "குன்று மலைகள் பெயர்ந்தாலுமே, க்ருபை
என்றும் உன்னைவிட்டு நீங்கிடாதே;
சென்ற க்ஷணவேளை என் முகம் மறைத்தேன்,
என்றும் என்னன்பில் நான் சேர்த்திடவே"

17 அய்யா! நான் கர்த்தரின் செல்லப்பிள்ளை—ஆனால்
மெய்தான் நான் பாவத்தில் கெட்டலைந்தேன்;
தூய்மை நான் ஆகவே யேசு ரத்தஞ்சிந்தி,
"பேய்" 'மரணம்' நின்று மீட்கப்பட்டேன்.

18 தேவனில் தன் மனம் ஊன்றி நிலைப்போர்க்கு
தேவன் தாமே 'சமாதானம்' 'பெலம்';
தேவன் இரக்கமாய் தந்தென்னைக் காப்பாராம்,
தேவன் வாக்கேதான் எந்தன் ஆதாரம்.

19 எந்தன் 'நிழல் சாயும் வேளையிலே' தேவா
உந்தன் வாக்கு மாறித் தள்ளுவீரோ?
மைந்தனைத் தந்தென்னை மீட்டுப்பின் கைவிட்டால்
உந்தன் செயல் துரோகமாகி டாதோ?.

20 "லோகத்தின் முடிவு நாள் மட்டும் நானேஉன்
மேகமாய் நின்றுன்னை காத்துக் கொள்வேன்;
தாகம் கொண்டு ரத்தம் சிந்தியே நான் மீட்டேன்,
ஏக பிதா ராஜ்யம் சேர்த்திடுவேன்.

21 முடிவு மட்டும் நிலைத்திருந்தால்—யேசு
முடிவிலே ஜீவக்கிரீடந் தாரார்;
முடியுடனே 'வெண்ணங்கி' ஆசனமும்,
முடிவிலா சந்தோஷமும் ஈவார்.

22 துன்பம் சோதனை எப்போது வந்தாலும் என்
அன்பின் பிதா அறியாமல் வரா;
துன்பம் சுத்தஞ்செய்யும், சோதனை என்னையே
அன்பில் பலப்படச் செய்யுமப்பா

23 ஐயைய்யா! நான் ஒரு ஏழைப்பிள்ளை—என்னை
பொயுலகை விட்டு சுத்தம் பண்ணும்;
மெய்தான் நான் துரோகியே, என்னை மீட்டாலல்லோ,
"பொய்யன்" கட்சி வெட்கம்தான் அடையும்.

24 "பாவலோகம்" "இளைப்பாரும் இடமல்ல"
"சாபத்துள்ளாய் நாசமாகுமிடம்";
தேவ பிதா வீடே நித்ய பேரின்பமாம்
ஆவலாய்ச் சேர்வேன் என் நேசர் ஸ்தலம்.

25 தேவனையும் அவர் ராஜ்யத்தையும் தேட
தேவை யெல்லாம் அதுகூட ஈவார்;
தேவை யெல்லாம் நாடித்தாமே தான் தேடுவார்
தேவனற்ற இந்த "பேய்" லோகத்தார்.

26 "தேவ பக்தியேதான்" "இம்மை மறுமைக்கும்"
தேவன் சொன்னார் — "பிரயோஜனமாம்";
தேவன் உடையோரே இங்கு குறைவின்றி
தேவ சமுகம் அங்கடைவாராம்.

27 என் மகனே! உந்தன் நெஞ்சை எனக்குத்தா
என்று கேட்க நீயோ என்ன தந்தாய்?
'என் உபவாசமும்', 'பாவ சங்கீர்த்னமும்'
'நன்மை' 'சன்மார்க்கமும்' "போதும்" என்றாய்

28 தன்னை வஞ்சித்தும் போதாமல்—இன்னும்
என்னை ஏமாற்றவும் நீ துணிந்தாய்;
உன்னை ஈடேற்றிட கேட்டதைத் தந்தல்லால்
பின்னே "தீ" "மரணம்" நீ அடைவாய்.

29 க்ருபை, க்ருபை, "தேவக்ருபையால் ரட்சிப்பு"
க்ரியையினால் பாவம் போய்விடாதே;
க்ருபையால் ரட்சிப்பைப் பெற்றதைரூபிக்கும்
"க்ரியை, வாக்கு, மனம்", சுத்தமாமே.

30 ரட்சிப்பு—'மர்ண ஜெயம்' 'உயிர்த்தெழுதல்',
ரட்சிப்பு—'யேசுவால் சாவாமையே',
ரட்சிப்பு—'பாவங்கள் மன்னிப்பின் நிச்சயம்',
ரட்சிப்பு—'ராஜ்யத்தின் நம்பிக்கையே!'

31 'யேசுவின் நாமம்' 'அறிந்தோர் மட்டும், முற்றும்
யேசுவின் மேல் நம்பிப் பற்றுவாரே;
யேசுவைத் தேடுவோர் வெட்கினதேயில்லை,
'யேசு நாமம்' அவர்க்கின்பமாமே.

32 யேகோவாவில் நானும் நம்பிக்கை ஊன்றி, என்
யோகோவாவை பலமாக்கிக் கொண்டேன்,
யேகோவா நம்பினோர் குறைபட்டதில்லை;
யோகோவா { முன் செல்ல பின் செல்லுவேன் (or) வின் நிழல் நான் தங்குவேன்.

33 என் ஆத்மாவே! நீ பெற்றுக்கொண்ட நன்மைகள்
ஒன்றும் மறந்திடாமல் நினைத்தால்,
சென்ற நாளைவிட இன்றும் சுத்தமாவேன்
என்றும் நான் ஏற்றும் "ஸ்தோத்ரபலியால்".

34 தேவனை நோக்கி உண்மையாய்த் தேடுவோர்க்கு
தேவனே பக்கம் இருப்பாராமே;
தேவபயமுள்ளோர்க் காகும் நன்மையாவும்
தேவனே பார்த்திருந்து காப்பாராமே.(சங் 145:18, 19)

35 கர்த்தர் தம் பக்தர்க்கு ஈயும் நன்மைத்திரள்
கர்த்தர் 'மனு புத்ரர் பார்க்கச் செய்வார்';

கர்த்தரவரை "தம் செட்டை நிழல் மூடி"
கர்த்தர் 'சமுகம் மறைவில்' காப்பார்.

சங். 31: 19, 20.

---

## 3

## " Creation "

*The Creature was made subject to vanity—Rom: 8: 20.*

தேவன் வார்த்தையின் அதிசயங்களை நான்
"தேவையான மட்டும் பார்த்தறிய"
தேவனே "என் கண்களை" நீர் திறந்திடும்
தேவ சுதனோடு சஞ்சரிக்க.

சங் 119: 18, லூக். 24: 45
ஆதி. 5: 22-24, 6: 9: 17: 1. சங். 128: 1
மீகா. 3: 8, 2, கொ. 13: 14. மத் 28: 20
யோவா. 14: 3, வெளி, 3: 21.

1 தேவன் நித்தியர் 'அன்பு, திரித்வம்', 'ஞானம்'
தேவன் "நன்மை பரிபூரணமே";
"தேவ தன்மை" வெளிப்படல் "க்ரியை இல்லால்"
தேவன் ஒன்றிருத்தல் கூடாததே.

2 தேவன் ஒருவரே 'நித்ய' வஸ்து, மற்ற
தேவன் அல்லாதார் 'அநித்யமே';
தேவனும் தம்மைப்போல் சிருஷ்டியை செய்தாலே
தேவர் அநேகர் — "ஏகம்" இல்லையே.

3 தேவன் ஒருவரே "நித்யவஸ்து" என்றால்
தேவன் தாமே "பூர்ண நன்மை" யாகும்;
தேவனின் சிஷ்டியும் "நன்மை" என்றால், அது
தேவன் "தன்மை" யில் குறைந்ததாகும்.

4 தேவ ஞானத்திலே "ப்ராஜைகள்" வேண்டியே
தேவன் சிஷ்டிகளைச் செய்தனராம்;
தேவனே தன்னைப்போல் சிஷ்டிக்கக்கூடாதே,
தேவன் "அநித்யராய்", சிஷ்டித்தாராம்.

5 தேவனல்லாதார் 'சிருஷ்டிகளே'—பாரும்
தேவனல்லாததே "மாயை", மாறும்;
தேவனல்லாதது "நன்மை" "பூர்ணம்", குறை
தேவன் "நன்மை", குறை "தீமை"யாகும்.

6 'தீமை' என்றால் 'குறைவான நன்மையாகும்'
'தீமை'யும் தேவனால் உண்டாயிற்றாம்;
"தீமை"யும் "இருளும்" சிஷ்டிக்கேயல்லாமல்
"தீமை"யின் கர்த்தருக்கெல்லாம் ஒன்றும்.

7 தேவனே சருவ வல்லவராயினும்
தேவனைப்போல் சிஷ்டி செய்ய ஏலா,
தேவன் "அளவற்றோர்" சிஷ்டி அளவுள
"தேவ ஞானம்" இதின் மேல் முடியா.

8 "தீமை" என்றால் சொல்வார் "நன்மையல்லாததே",
"தீமை" எதார்த்தம் — குறைந்த நன்மை,
"தீமை"—"குறை நன்மை" தேனல்லாதது
'தீமை' குறிக்கும் 'சர்வ சிஷடியை'.

9 'தீமை' பாவம் அல்ல, 'பாவம்' மீறுதலாம்,
'தீமை'—'குறை பூரணம்' மாறுந்தன்மை,
'தீமை' ஸ்திதி சிஷ்டி மீறவே காரணம்,
"தீமை 'இப்போ அர்த்தம்' பாவத்தன்மை"

10 'தீமை'—குறை பூர்ணம்—சிருஷ்டிகர் வேலையே,
'தீமை'—பாவத்தன்மை ஆதம் மீர்தல்,
'தீமை' ஒன்றில் நின்று 'தீமை' ரண்டில் வீழ்ந்தான்,
'தீமை' நீக்க யேசின் 'பரவச் சாயல்'.

11 சிஷ்டி 'மனுவை' குறை பூர்ண தன்மையில்
சிஷ்டிகர் 'தாமே' உண்டாக்கினதால்,

சிஷ்டியை ரக்ஷிக்க சிருஷ்டிகர் 'தாமாயே'
சிஷ்டி 'மாம்சம்' போர்த்தார் 'நித்ய அன்பால்'.

12 பூமி அண்டங்களில் சிறிதே யாயினும்
பூமியில் "மனு" உண்டாக்கலையோ?
பூமிக்கு மேலான கோடி அண்டங்களில்
சாமி 'ஜீவன்கள்' உண்டாக்கிடாரோ.

13 சருவ வல்லவர் சிஷ்டித்த அண்டங்கள்
"வெறுமை"யாக விடவில்லையாம்;
'சருவம்'—பூமிபோல்—'தூதர்' முதலோரால்
சிருஷ்டிகளால் நிறைந்ததுவாம்.

14 தூதரும் சிஷ்டிகளானதினால், அவர்
'மாது மயக்கம்' விழுந்து கெட்டார்;
வாது செய்யாமலே ஒப்புக்கொள்ளல் நன்மை
தூதர் விழுந்தும் ரட்சிப்படைவார்.

15 ரட்சிப்பை யடைந்த தூதர்களின் கூட்டம்
"ரக்ஷணிய சேனைகள்" சேனைகளாய்
ரக்ஷணிய வேலைகள் ஆவலாய்ச் செய்யவே
ரட்சருக்குண்டாம் "ஏவல்களாய்".

16 துக்கம், துன்பம், அறியாத தூதர் பாவி
துக்கப்பட்டு மனந்திரும்பும்போது,
எக்களித்தெப்படி "சந்தோஷம்" அடைவார்,
"துக்கம்" இல்லால் "சந்தோஷம்" இராது.

17 ரட்சிப்படையாது தூதர்களெப்படி
ரட்சிக்கப்பட்டோர்க்காய் ஆர்ப்பரிப்பார்;
ரட்சிப்படையாத பாவி நிலைமையை
ரட்சிப்படைந்தோர் மட்டும் அறிவார்.

18 தேவனே சருவ வல்லவராயினும்
"பாவ சாயல்" தாமே பூணாமலே,
தேவன் தன் சிஷ்டியை ரட்சிக்கக்கூடாதே
தேவன் "பாவிகஸ்தி"ப்படாமலே.

19 தேவ சுதனே 'தேகம்' 'ஆத்மா' 'ஆவியில்'
பாவத்தின் கஸ்தி ருசித்ததாலாம்,
பாவியைத் "தாங்கி" விடுவிக்க எப்போதும்
பாவியின் ஹைறப் பிரீஸ்ற்றாய் நிற்கிறாராம்.

20 நித்ய தன்மை இல்லர் சிஷ்டிகளில் நின்று
"நித்ய ஜீவனை" விரும்புவோரை
நித்ய பிதாவின் ராஜ்யம் குடி ஏற்றிட
சித்தங் கொண்டு 'தந்தார் தம் சுதனை'.

21 சிஷ்டி "குறை பூர்ணம்" "மாயை" "மாறும்" 'தேயும்'
சிஷ்டி துவக்கம் முடிவுள்ளதாம்;
சிஷ்டி "சடம்" மர்ணம் — அழிந்து மாறுதல்
சிருஷ்டிகர் மட்டும் மாறாதவராம்

ரோ. ៛: 20: சங். 102: 24-27; உபா. 33; 27
1 சாமு. 15: 29; எரேமியா. 10: 10; மீகா, 5: 2
மல். 3: 6; யோ. 1: 17; 1 தீமோ. 1: 17. எபி 13: 8
யாக் 1: 17

22 இந்த மாறுதலே "மாறி மாறி" சிருஷ்டி
அந்த மில்லாக் காலம் ஓடிடுமாம்;
இந்த அந்த மற்ற நாளே "கர்த்தர் நித்யம்"
தந்த வார்த்தையில் நீரே காண்பீராம்.

சங். 102: 24—27; ஏசாயா. 57: 15.

---

## 4

## சாத்தான்

அதிகாலையின் மகனாகிய விடி வெள்ளியே! நீ வானத்திலிருந்து விழுந்தாயே!

ஏசாயா 14: 12— 15; யோபு 1; 6—12 etc:

1 சாத்தான் விழாமுன்னே ப்ரதான தூதனும்,
சாததான் "தேவனைப்போல்" ஆகத்தேடி,
சாத்தான் சம்பாதித்தான் "நித்ய அழிவை",
சாத்தான் பெற்றான் "பலன் தக்கபடி".

2 சாத்தான் பணிவிடை செய்ய சிருஷ்டித்தார்;
சாத்தான் தன்னை 'இருளா'க்கிக் கொண்டான்;
சாத்தான் துணிவாலே யேசுவை சந்தித்து,
சாத்தான் தன்னையே வணங்கச் சொன்னான்.

3 சாத்தான் இன்னும் தம் சித்தம் நிறைவேற்ற,
சாத்தான் செயல்களை ஆண்டு வாரார்;
சாத்தான் மரணத்தை வென்று "மனுவுக்கு"
சாத்தான் மேல் ஜெயமும் தந்து வாரார்.

4 "நித்ய அழிவே" ரண்டாம் மரணமாம்
நித்ய ஜீவன் வேண்டார்க் கேற்றவிடம்
நித்ய அழிவில் "பாவம்" "மரணம் சாத்தானும்".
சத்தழிந்து "சடம்" மாறுமிடம்.

---

## 5

**"Mortal Man"** — சாவுக்கேதுவான மனுஷன்
ஆவி ஆத்மா, சரீரம் — யோபு 4: 17; 1 தெச. 5; 23.

1 ஆத்மா அழியாத வஸ்து யென்றால் சத்யம்,
"ஆத்மா" வும் "தேவனும்" "நித்ய வஸ்தே";
"சாத்தானோ" மேல் சிஷ்டி "நித்திய வஸ்து"வே,
"சாத்தான்" "ஆத்மா" "தேவன்" திரித்வமே.

2 தேவன் ஒருவரே நித்ய வஸ்து மற்ற,
தேவனல்லாதார் "அநித்தியமே";
தேவ சுதனாலே "சாவாமை" உண்டல்லால்
தேவனற்றோர்க்கு "ரண்டாம் மரணமே".

3 தேவன் 'ஜீவன் ஊதி சாவாமை உண்டென்றால்,
தேவன் 'சக்தி' 'ஞானமும், உண்டல்லோ?
தேவ 'வியாபகம்' 'தத்வம், அளவற்று
தேவனைப் போல் இருக்குமல்லோ?

4 இப்போதென் ஜீவனோ! காற்றில்தானே, அது
எப்போது என்னை விட்டோடிடுமோ?
இப்போநான் யேசுவைப்பற்றிக்கொண்டால் மட்டும்
அப்போ 'நித்ய ஜீவன்' ஆவாரல்லோ.

5 சிஷ்டிகர் ஜீவனே சிஷ்டிக்கு ஏறகாதே
சிஷ்டிச்கு "சாவாமை" "க்றிஸ்தில்" தானே;
சிஷ்டிக்கு "ஏதும் அழியாமை" உண்டாயின்
சிஷ்டிகர் "நீ சாவாய்" சொல்லிடாரே.

6 "சாவாமை" "நித்திய ஜீவனுக்" கேற்றது
"சர்வாமை" சிஷ்டிக்கு ஏற்காததே;
"சாவாமை" யேசுவை நம்பிப் பெற்றாலல்லால்
"சாவாமை" சிஷ்டிக்கு அந்நியமே.

7 இந்த உடலுக்குக் காற்றுத்தான் ஏற்றது;
இந்த "சரீரம்" அழியுமல்லோ,
அந்த "சரீரமே,, சாவாமை உள்ளது,
மைந்தன் "நித்திய ஜீவனு"க் கேற்றதல்லோ.

யோவான்: 4: 9,

8 சிருஷ்டிக்கு ஏதும் 'அழியாமை' உண்டாயின்
சிருஷ்டி "ஜீவக்கனி" தின்றிடாமல்,
சிருஷ்டிகர் "தோட்டத்தை சேராபீன்கள் கொண்டு"
சிருஷ்டி அண்டாமல் ஏன் வைத்தார் "காவல்".

ஆதி 3: 22-24

9 "ஜீவ விருட்சக்கனி" யாலே தான் உண்டு,
ஜீவன் "நித்யமாய்" "இருக்குந் தன்மை",
பாவ நிலைமையில் இக்கனி தின்றாலோ,
பாவிகள் "என்றுமே சாகார்" உண்மை.

ஆதி. 2: 9; வெளி 2: 7.

10 ஆத்மாவுக்கே அழியாமை, மெய் உண்டாயின்,
"ஆத்மா கர்த்தன்" "வந்து ஏன் சொல்வாரே,
ஆத்மா என்னை விசுவாசத்தாலன்றியே,
ஆத்மாக் கழியாமை "கிட்டிடாதே".
யோவான் 3; 16-18; 11: 25, 26.

11 "குமாரன் ஒருவரே சாவாமை உள்ளோராம்";
"குமாரன் தான் சாவாமை கொண்டு வந்தார்";
"குமாரன் உடையவன் ஜீவன் உடையவன்";
"குமாரன் ஏற்கார் நித்ய ஜீவன் இல்லார்".
1 தீமோ 6: 16; 2 தீமோ 1: 10; 1 யோ. 5: 11, 12.

12 'ஆத்மா' அழியாத தன்மை உள்ளதாயின்,
"ஆத்மா" கறைப்படா, 'மீட்பே' வேண்டாம்;
ஆத்மாவின் கர்த்தரும் 'ஆத்ம மீட்பரா'கார்,
'ஆத்மா' 'செத்தாலல்லால்' மீட்பு வேண்டாம்.
ஏசா 38: 17.

13 யேசுவே தான் "ஆத்ம மீட்பர்,' என்று இங்கே,
பேசுவோ ரெல்லாமே பொய்யராச்சே,
யேசு தம் "ரத்தத்தால் ஆத்மா ஊற்றி"யில்லாமல்
"யேசுவின் மரணம்" வியர்த்தமாச்சே.
ஏசா. 53: 12 ஓசி 13: 14; எரே. 50: 34.

14 ஏக தேவன் வார்த்தை ஏகக்கருத்துள்ளதாம்;
"சாகவே சாவாய்" என்றுண்மை சொன்னார்,
லோகம் அதிக பிரசங்கிகளாலேதான்
'ஏகன்' வார்த்தைவிட்டு முற்றும் கெட்டார்.

15 தேவன் சொன்ன வார்த்தை நம்பாமலே இன்னும்
தேவ 'துரோகி' வார்த்தை நம்பிக்கொண்டாய்;

தேவன் வார்த்தை தள்ளி சத்ரு வார்த்தை நம்பி
தேவனைப் "பொய்யரே ஆக்கி"வராய்.

16 "சாகவே சாவாய் நீ" என்றார் தேவன், சத்ரு
"சாகவே சாவதில்லை" என்றானே;
சாகப் பயந்திப்போ 'சத்ரு'வை நம்பியும்
"சாகவே சாவாய் நீ" திண்ணம்தானே.

17 "நீ". என்றால் "தேகம்", 'ஆத்மா', 'ஆவி'கூடியே,
"நீ" என்றால் "அம் மூன்றில் ஒன்றல்லவே";
"நீ" தின்றால் "மூன்றுமே" "நீ" "செத்தால்
"நீ" எழுப்ப மூன்றும்கூடி "நீயே". [மூன்றுமே",
ஆதி 2: 16 17.

18 "நான்" என்ன செய்தாலும் "மூன்றும்"தான் கூடி
"நான்" என்பது "சாகா" "ஆத்மா என்றால், [யே,
"நான்" பாவம் செய்தாலும் தேகம்தான் சாகுது,
"நான்"—"ஆத்மா"—"பாவி" தான் தப்புவதால்.

19 "நான்" "சாகாப்பாவிதான்" தப்பினாலும்"ஆத்மா",
"நான்" "நித்ய வஸ்து", பாவந் தீண்டுமோ?
நான்' 'பாவி' தப்ப 'தேகம்' சாக நீதியோ?
"நான்" பாவஞ் செய்தால்"மூன்றுஞ் சேர்ந்தல்லோ".

20 "ஆத்மா" என்றால் "அறிவுண்டாகும் தன்மையாம்";
"ஆத்மா"வின் விர்த்திக்கு 'ஆவி' வேண்டும்;
'ஆத்மா' ஜீவப் பிராணித் தன்னைக் காக்குந்தத்வம்,
'ஆத்மா!" ஜீவனாலே தான் பிறக்கும்.
ஆதி 2: 7.

21 'ஆவி' என்றாலோ "விருப்பம் 'ஆசை', ஆவல்";
'ஆவி'யின் வேலை 'தா', 'தா' என்பதாம்;
'ஆவி' குறையவே ஜீவனும் குன்றுமே;
"ஆவி"யும் ஜீவனால் தான் பிறப்பாம்.

22 "தேகம்" தான் ஆதாரம் "ஆத்துமா" "ஆவிக்கு",
தேகத்தில் "ஜீவனால்" இரண்டும் உண்டாம்;
தேகத்தைவிட்டு இஜ்ஜீவன் பிரிந்தாலோ,
ஏகமாய் "இரண்டுமே" போய்விடுமாம்.
லூக் 23: 46; லூக் 23: 52

23 "ஆத்மா" "ஆவி" ஜீவப்பிராணிக்கெல்லாம் உண்டு
"ஆத்மா" விர்த்தி பிராணி "ராசிப்படி";
"ஆத்மா" விர்த்தியும் "கருவிகளால்" பேதம்
"ஆத்மா" விர்த்தி "மாம்சம்" பேதப்படி.
பிர 3: 18 19.

24 "பாவஞ் செய்த ஆத்மா சாகும்" என்றார் தேவன்;
பாவஞ் செய்யாதார் இப்பாரிலில்லை,
"பாவம்" "மர்ணம்" நீக்கி "சாவாமையை" த்தந்தும்
"பாவம்" தள்ளி யதை ஏற்பாரில்லை.
எசே. 18: 4 ரோ. 3: 10 23; 2 தீமோ. 1: 10
யோ 1: 3—11; 5: 40; அப் 22: 18.

25 பாவத்தின் 'போதை' பசித்தாலும் விடாது;
பாவ வேதனையும் நீங்கிடாதே;
பாவத்தின் சம்பளமான மரணமும்
"பாவம்" நின்னாலும் உறங்கிடாதே.
எண் 32: 23; ஆதி. 2: 17; எபி 9: 27.

26 "பாவம்" என்றால் சிருஷ்டிதானே தன் நன்மையை,
தேவனை நம்பாமல் "தேடுதலாம்";

"தேவர்களைப் போல ஆகவே "தேடி" தம்
தேவனை விட்டுப் பிரிதலே யாம்.

ஆதி. 3: 5, 8.

27 "பாவம்" என்றால் தேவன் வார்த்தையை நம்பாமல்,
"தேவ கற்பனையை மீறுதலாம்";
தேவன் வார்த்தை நம்பிக் கீழ்ப்படிந்தாலல்லோ,
தேவ "ஜீவன்" "சாவாமை" பெறலாம்.

1 யோ. 3: 4.

28 "பாவம்" "ஓர் வித்து"—கிளை, இலை, பூ, பழம்,
"பாவ மரத்தின்" கனிகளாகும்;
பாவக் கனிகளின் விர்த்திக்குத் தக்கதாய்,
"பாவ—வித்தின்" வேர் பலத்ததாகும்.

29 ஆதம் 'ஒரே' பாவம் செய்ய சமயமே
ஆதம் செய்தான்—"குறை பூரணமே";
ஆதமின் "பாவத்தை" நீக்கத்தலைப்பட்டார்,
ஆதம் சந்ததி விடுதலையே.

யோ. 1: 29; எபி. 9: 12.

30 "ஆதம் பாவம்" நம் "ஜென்ம பாவக்குணம்"
ஆதம் "பாவம்" சுதன் தீர்த்ததினால்;
ஆதம் பாவத்திற்காய் "ஆக்கினையில்லையே",
ஆதம் மக்கள் தீர்ப்பு "பாவங்களால்".

1 யோ. 2: 1.

31 "பாவத்தை நீக்கி" இலவசமாய் "ஜீவன்"
"பாவஞ் செய்வோருக்குத்" தந்தபோதும்,
"பாவம்" ஆசைகொண்டு ஜீவனை தள்ளுவோர்
"பாவங்கள் — தீர்ப்புத்" தப்பார் ஓர் காலும்.

32 "கீழ்ப்படியாமை" யால் "மனுஷன் கெட்டானும்";
கீழ்ப்படிந்தாலே தான் இரட்சிப்புண்டு;
கீழ்ப்படிதல் "க்றிஸ்தின ஜீவனில் சேர்த்திடும்,
கீழ் படியாமை 'பலன்' "அழிவு"

எபி. 5: 8 9; 1 பேது 1: 2; கொலே. 3:6

---

## 6

### மரணம்

ஆதி. 2: 17; வெளி 20; 14

1 "மரணம்" என்ருல் "ஜீவன"ற்ற நிலைமையே;
மர்ணமே மேலான "நித்திரை" யாம்;
மர்ண நித்திரையில் "அறிவு" "ஞானம்" "க்ரியை":
மர்ணம் நீங்கு மட்டுமே "யில்லையாம்".

மத். 9: 24; யோ, 11: 11. பிர. 9; 5 6, 10; யோபு 14: 21;
யோ 9: 4; சங். 88: 11, 12. எசா. 38: 18

2 மர்ணம் இரண்டென்று சொன்னலும் நம்பார்கள்;
மர்ணம் 'ஒன்று சாத்தானல் வந்ததே,
மர்ணம் " ரண்டு" தேவனுலே ஆனவிதி,
மர்ணம் தான் அநித்தியத்தின் முடிவே.

ஆதி. 2: 17; வெளி. 20: 14; 2 பேது. 3: 10, 12;

3 " சாத்தான திபதி" யான " மரணமே";
சாத்தானைப் போல " அநித்தியமே";
சாத்தான் மரணம் தேவ ஆக்கினையின் 'நிழல்'
சாத்தான் கதியோ " ரண்டாம் மர்ணமே".

எபி. 2: 14; லூக். 24: 6; 1 கொ. 15: 54;
சங், 23: 4; 107: 10· 11; லூக். 1: 78,

4 செத்தவுடனே நீ மோட்சம் போக ஆசை,
செத்த நேசருடன் சேர்ந்திடவே;
செத்தோர் இப்போதானும் மோட்சம் இருந்தாலே
மெத்தப் பொய்யர் "ஆவார் யேசு தானே.
யோபு, 14: 10-14; 1 தெச. 4: 16, 17; யோவான் 14: 3.

5 செத்தோர் உடனே தான் மோட்சம் போவா
[ரென்றால்,
"செத்தோர் உயிர்த்தெழுதல்" பொய்யாச்சுதே;
"செத்துயிர்த்த யேசின்" வாக்கெல்லாம் பொய்யாக,
"எத்தன்" சாத்தான் வழிதான் இதுவே.
யோவான், 11: 25; கொ. 15: 3 5 13, 16, 23; யோ 8: 44.

6 செத்தோரைக் "காண்பதும்" சத்தத்தைக்
[கேட்பதும்,
"செத்தோர்" மோட்ச "தோற்றம்" "ஆவியாலே;"
செத்தோர் எழும்புவார் "எக்காள" சத்தத்தால்
"செத்தோர் மண்" அம்மட்டும் காவலிலே.
1 சாமு. 28: 11-29; யோப, 14: 12; அப். 20: 8, 9, 10.

7 "மர்ணம் கடைச்சத்ரு" சொன்னார் தேவன்
[-இன்னும்,
"மர்ணாதிபதி, பிசாசு" என்றார்;
'மர்ணாதிபன்' வென்று "மனு" விடுவிக்க,
மர்ணத்துள்ளாய், "நானே வழி" என்றார்.
1 கொரி. 15: 26; எபி. 2: 14; ஆக். 24: 6; 1 கொரி. 15: 54—57.

8 "மர்ணாதிபனை ஜெயித்து," பின் கர்த்தரே,
"மர்ணம் கடைச் சத்ரு" என்றாரல்லோ,
மர்ணத்தில் சென்று உயிர்த்து வெற்றி பெற்றாலும்,
"மர்ணம் கூர் போம்"—மோட்ச வாசலாமோ?

9 "மோட்சவழி, வாசல் ஜீவன் நானே"—யேசு;
"மோட்ச வாசல்—சாத்தான் மர்ணம்"—மனு;
மோட்ச வாசல் 'இருவருக்கும்' பங்கானல்
"மோட்ச வாழ்வின் தன்மை? நீயே சொல்லு.

10 'மர்ணம்' இது ரண்டாம் மர்ணம் மட்டும் போகும்,
"மர்ணத்தின் கூரோ? விஸ்வாசிக்கில்லை
"மர்ணம் ரண்டில்" சாததான் மர்ணமும் சாகுமே";
"மர்ணம் இது" "வென்ருல்" ரண்டேயில்லை.

11 யேசுவை ஏற்று நிலைத்திருந்தால் அவர்க்
கேசுவால் 'மர்ணம் ஒன்றின் மேல் ஜெயம்,
யேசுவால் 'ஒன்றில்' ஜெயம் பெற்றெழுந்தோர்க்
[ கோ.
யேசு சொன்னர் மாணம் ரண்டேயில்லை.

யோ. 11: 11, 25; 1 கொ. 15: 56, 57; 1 யோ. 5: 4, 5, 14;
யோ. 3: 15 18: 5: 24; ரோமர், 8: 4; 6: 2, 23.

---

## 7

### "மனிதனுகிய கிறிஸ்து இயேசு"

### ஞானஸ்நானம்

### 1 திமோ. 2: 5. 6.

1 யேசு "பாவ மாம்ச சாயல் போடுமுன்னே"
யேசு சொன்னர் "தான் மனுஷன்" தன்மை
யேசு "மனு" த்தன்மை "நித்யவஸ்து" தன்மை
"யேசு தன்மை" "நித்ய தேவ தன்மை"

யோ. 3: 13; 6: 3?; ரோம. 5: 15, 8: 3; கொலோ. 2: 9;
எபி. 7: 24, 26; 10: 12.

2 யேசு சொன்னார் "தேவன் ஆவி" ரூபம்-மேலும்
பேசும் "என்னைக்கண்டான்" "பிதாவைக்கண்
"வாசம் பிதாவில் நான், பிதாஎன்னிலுமே" [டான்";
நேசா! "நானும் பிதாவும் ஒன்று" காண்.

யோ. 4: 24; 14: 10; 10: 38; 10; 30.

3 யேசுவிட்டார் தம் "பிதாவின் மடியையே"
யேசின் மேனிபோல் பாவிக்கியவே;
யேசின் மரணத்தில் நீ இணைந்தாலல்லால்
யேசின் விண்மேனி ஒப்புப் பெருயே.

ரோ. 6: 3-5; கொலோ. 2: 12; பிலி. 3: 21; 1 யோவான் 3; 2; 1 கொரி. 15: 52

4 ஆதம் பாவம் செய்யும்போது "மனு ஜாதி"
ஆதம் "இடுப்பில் இருந்ததாலே",
ஆதம் பாவக்குணம் மக்களும் அடைந்தார்,
ஆதம் மர்ணம் மக்களுக்குமாச்சே.

ரோம. 5: 12; எபிரேயர் 7: 9, 10.

5 யேசு ரண்டாம் ஆதம் பாவிக்காக நித்ய
நேசத்தால் "சாபமாய்" பாடுபட்டு,
நீசர் மர்ணமும் தான் அடைந்து அதை
"யேசு ஜெயித்தார்" "உயிர்த்தெழுந்து".

6 ஆதம் ஒன்றின் "ரத்தம்" பாவியானேன், ஆனால்
ஆதம் ரண்டில் "நின்று" நீதி பெற்றேன்;
ஆதம் ரண்டின் "மர்ணம்—உயிர்த்தல்," ஒட்டியேசு
நாதர் "நித்ய ஜீவன்" பங்கும் பெற்றேன்.

ரோ. 5; 12, 19, 21; கொரி. 15: 21, 22; ரோ. 6: 5; எபே. 2: 5, 6; கொலோ. 2: 12; 3: 1, 3

---

**Baptism**

7 விசுவாசத்தால் உனக்கும் உண்டே எல்லாம்,
'விசுவாசம்' 'அன்பால்' 'கீழ்ப்படியும்';
"விசுவாசித்தால் நீ ஞானஸ்நானம் பெறு",
"விசுவாசம்" "க்ரியை" காட்டவேணும்.

8 "ஞானஸ்நானம்"—"யேசின் மர்ணம் உயிர்த்தெழு
ஞானர்த்தங்கொண்டு பெறுதலேயாம்; [தல்"
"ஞானஸ்நானம்" "விசுவாசித்தோர்க்கு மட்டும்"
ஞானஸ்நானம் மற்றோர்க்காக்கினையாம்.

மாற்கு 16 16.

9 "தண்ணீர் தெழிக்குதல்", தண்ணீரை ஊற்றுதல்,
"தண்ணீரால் ஞானஸ்நானம்" இல்லையாம்;
தண்ணீர் "மூங்கி எழல்" நோவாவின் பேழைபோல்
"தண்ணீர் ஞானஸ்நானம்" என்பதேயாம்.

1 பேதுரு 3: 2, 21

10 'மண்' சிரங்கை கொண்டு பிரேதம் மேல் தூவினால்
மண்ணில் "அடக்கமோ" நீரே சொல்லும்;
"மண்ணில் அடக்கமும்" "நீரில் மூழ்குதலும்"
"மண்ணோன்" பாவத்துச் செத்ததாகும்.

11 தண்ணீர் தெளித்தல் "திருடர் வழி" யாகும்
தண்ணீரில் "முக்கில்" சிசுக்கள் சாகும்;
தண்ணீர் முக்கி ஞானஸ்நானம் பெற்றார் சொற்பம்,
தண்ணீர் தெளித்தலால் "லட்சமாகும்".

12 பள்ளி உபாத்தி கணக்குப் போட்டால்,
பள்ளிப் பிள்ளைகள் செய்வார் 'சரி' 'தப்புமே';

பள்ளி உபாத்தி 'ரண்டும் சரி' என்றாலோ
பிள்ளைகள் தீர்ப்பார் — "இவன் மூடனே".

13 யேசு வந்தார் "பிதா சித்தம் நிறைவேற்ற"
யேசுதாமே "ஸ்நானம்" முங்கிப் பெற்று,
யேசு வரச்சே தெளித்தலும் சரி என்றால்
யேசின் "ஞானம்" மேன்மை நீயே சொல்லு.

14 தண்ணீர் தெளிக்கப் பெற்றோர் சாகும் வேளையில்,
விண் பிதா 'ஆத்மாவை' சேர்த்திட்டாலே,
"தண்ணீர் தெளித்தலே போதும்" மற்றேதும்வீண்
'தண்ணீர்' நித்ய ஜீவிய தீர்த்தம்" ஆமே.

15 "தண்ணீர் தெளித்தல்" "முக்கிஸ்நானம்" ஏதுவும்,
மண்ணோன் இதயம் மாற்றமுடியா;
கண்ணீருடன் ' மெய்மனந்திரும்பல்" இன்றி,
கண்ணீரால் "பாவம்" இதயம் நீங்கா.

16 "ஆதம்" "செய்த பாவம்" யேசு தீர்த்ததாலே
ஆதம் வம்ச "பாலர்" 'பாவம்' இல்லார்;
வேதம் சொல்லும் "அவர் பாவம் செய்யாததால்
'போதனை' 'மனந்திரும்பல்' வேண்டார்.

17 "நூறில் ஒன்று" பாவி "குணப்பட்டான்" பின்னும்,
நூறில் "மீதம்" "நீதிமான்கள்" என்றார்;
பார்! இவர் மனந்திரும்பவே வேண்டாமாம்!
நூறில் 'மீதம்' "இவர் யாரோ என்பார்".

18 "தூதர்" என்றால் "நூறும்" தூதராவார் - அப்போ
தூதரி "லொன்று" "சாத்தானே" ஆவான்;

"தூதன் கெட்டோன்" குணப்பட்டான் என்று
[சொன்னால்,
தூதன் குணப்பட்டோன் "சாத்தான்" ஆவான்.

19 பாவம் நீக்கப்பட்ட பாலர்க் கவஸ்யமோ
பாவத்தினின்று "மனந்திரும்ப"?

20 "மனந்திரும்பல்" "பாவ மன்னிப்பின் நிச்சயம்"
மனதில் ஆவியால் சாட்சி யுண்டாம்;
'மனம் மாறும்'— சகலமும் புதிதாகும்
மனந்தந்தால் 'யேசு ஆளுவாராம்'.

மாற். 16: 16. ரோ, 8: 16; 2 கொரி, 5; 17 லூக், 12: 37;
யோ. 14: 23; வெளி. 3: 21.

21 தேவன் வார்த்தை சத்யம் — மாறாததே சொல்லும்
தேவன் "எதிர்" "மாறாய்" பேசுவாரோ?
தேவன் வார்த்தை "மனு" மாமிச சிந்தைக்கு"
தேவன் சொன்னார் "என்றும் ஏற்காதல்லோ?

22 தண்ணீரால் 'பாதிரி' பாவம் போகும் என்றால்
தண்ணீரால் இந்துவும் டி"ற்றோ" என்பார்.
தண்ணீர் "மந்திரித்தால்" பாவம் போக்கும் என்று
எண்ணாமல் "பாதிரியும்" சாதிப்பார்.

23 'மனந்திரும்பல்' அன்றி "ஞானஸ் நானமே"
'மனப்பாவக்குணம்' நீக்குமென்று,
"மனந்திரும்பாரே" போதித்து பாவியின்
மனதைத் தேற்றி வாரார் கெடுத்து.

24 போதனை மாருய் "மனந்திரும்பு" என்ருல்
போதகன் 'அரிசி' திண்டாட்டமே
போதகன் ஒருகால் பாவத்தைக் கண்டித்தால்
"வேதனை" கேள்வி பெருகிடுமே.

25 தேவன் சித்தம் செய்ய மனதுள்ளோர் மட்டும்,
'ஜீவ உபதேசம்' ஏற்பாராமே;
தேவன் வார்த்தையோ மனு ஞானமோ? இதை
"தேவாவியால் தான் அறிவாராமே".

26 "மூடர் நுழைவாராம் தூதர் பயந்தப்போ"
கேடு சம்பாதித்த "சாத்தான்" ஏவ,
பாடுபட்ட தேவ மைந்தன் வார்த்தை விட்டோர்
"கேடே" "அடைவார்" சந்தேகம் அற.

---

## 8

### தேவ புத்திரர்

1 "ரத்தத்தால் பிறந்தோர்" புத்திரராகார்—மாம்ச
சித்தத்தால் சேர்ந்தோரும் "அப்படியாம்"
சித்தங்கொண்டு "குரு" ஆக்கலும் வீணேபோம்
"அத்தனலே பிறந்தோர் புத்ரராம்".

2 "புத்ரர்" மட்டும் "அன்பினுலே கீழ்ப்படிவர்"
"புத்ரன்" "ஆவியால" பிறந்ததினுல்
புத்ரால்லார் "வேசி மக்களாவார்"—அவர்
புத்ராகார் "வேஷம் பூண்டதினுல்".

3 ஆவியால் பிறந்தோர் இதயந்தன்னில் "தான்
ஆவியால் யேசுவும் தாம் பிறப்பார்;

பாவங்கள் மன்னிப்பார்—சாபமே, நீக்கினர்
"ஆவியின் சந்தோஷமு" ந்தருவார்.

4 லோகத்தில் பாடுகள் மெத்தவுண்டு—ஆனல்
"லோக மாம்ச சிந்தையோர்" சுமப்பார்;
"லோகம் ஜெயித்தோரில்" நீ நிலைத்தால் மட்டும்
"லோகம்" "மாம்சம்" மேல் ஜெயம்தருவார்.

5 வானதி வானங்கள் "தேவன் கொள்ளா" ஆனல்
வான் கர்த்தன் சொன்னர் மனு மனதில்
நான் "அவன் ஏற்றாலோ வந்து ஆண்டும்" பின்னல்
"நான் வைத்துக்கொள்வேன் சிம்மாசனத்தில்.
1 இரா. 8: 27; வெளி. 3: 20.

6 "சத்துரு" உன்னேடு போராடுவான்—திண்ணம்
சத்துரு உன்னையோ மேற்கொள்ளானே;
சதியம் கர்த்தர் நான் உன்னை விடுவிக்க
நித்தமும் உன்னேடிருக்கிறேனே".

7 "யேசுவின் சரீரம்" "விண் வஸ்து" வின் தன்மை
யேசு "மண் மனுக்கு"ச் சாயல் தந்து,
யேசு தன் "ரத்தத்தால் மீட்கப்பட்ட சபை"
யேசு சொன்னர் தன் "சரீரம்" என்றா,

8 யேசு "சரீரம்" "விஸ்வாசிகளால்" உண்டாம்,
யேசு வரச்சே தான் "ரூபம்" தந்து,
யேசு தன் "சாவாமையும்" கொடுத்து—அதை
யேசு சேர்ப்பாராம் "தேவன் சபைக்கு".

9 தேவனே 'ரட்சித்தீர்' பாவங்கள் மன்னித்தீர்
தேவன் சபைக் கென்னைக் கொண்டுபோக,

"ஆவியால் போதியும்" வார்த்தையால் போஷியும்,
"தேவ சுதன் சாயல்" "நானு" மாக.

2 தீமோ. 1: 10, எபி. 2: 10 அப். 20: 28, 1 கொ. 15: 9,
1 யோ. 2: 27, ரோமர் 8: 29.

---

9

"ஜீவ அப்பம்"

"தேவன் மாம்சத்திலே வெளிப்பட்டார்"
யோ, 6: 35, 48, 51; 1 தீமோ. .; 16:

1 "அப்பம்" ஜீவனுக்கு ஆதரவு— பாரும்
செப்பினர் "ரத்தமே ஜீவன்" என்று,
'அப்பம்' இருந்துமே "ரத்தம்" இல்லையானல்
தப்பாமல் போகுமே தேகம் மாண்டு.
லேவி. 17: 14.

2 தீனிக்குத் தக்கதாய் "தேகம்" "ஜீவ்யம்" —இது
மானிலத்தோர்க்குத் தெரிந்த ஞானம்;
"ஞானி" சொன்னர்-"தெய்வத்தை அறிவது தான்"
"ஞான" "வான் ஆகாரம்". "அப்பம்" "கல்பம்".
யோ 17; 3

3 "ஜீவ அப்பம் நானே" "இதைப்புசிப்பவன்
ஜீவனுள்ளோனய்.என்றும் பிழைப்பான்"
ஜீவன் 'பெற' 'ரத்தம்' 'தேகம்' 'அப்பம்' பலம்
ஜீவன் பெற்றோன் தான் இதை ருசிப்பான்.
யோவான் 6: 35, 34

4 யேசு "நானே" சத்யம்" என்ருர்-அது "தேவன்"
யேசில் "மாம்சத்தில் வெளிப்பட்டதே";

யேசில் "இரகசியம்" அறிய அறிய
யேசின் "ரத்தம் தேகம்" என் "உணவே"

யோ. 14: 6; எபேசி 4: 21.

5 'அப்பம்' ஜீவன் ஆதரவாகுமுன் "தான்யம்"
எப்பாடு பட்டுத் தருந்த தாகும்;
அப்பாடு பட்டாலே ஏசின தேகம் 'மாம்சம்'
ஒப்பால் 'நானே சத்யம்' 'அப்பம்' ஆகும்.

6 அப்பம் மாம்சமல்ல, மாம்சம் அப்பமல்ல,
"அப்பம்' என் மாம்சம், புசி" என்றுரே-
அப்பம் தன் மாம்சமாய் மாற்றுமலே சொன்னார்'
அப்போ 'புசி' என்றால் ஆவியாலே.

7 'இப்பொழுது மொண்டு கொண்டு போங்கள்' என்றார்
அப்போதே "தண்ணீர்" ரசமாயிற்றே
இப்போ இதென் மாம்சம் என் ரத்தம்" என்றாலும்
'அப்பம்' "ரசம்" வேறாய் மாறலையே.

8 ஏசின் வல்லமையால் மாறாமல் போனது
"வேசித்தாய்" சக்தியால் மாறலாச்சோ?
ஏசின் அப்பம் "ரசம்" "மாம்சம்" ரத்தம் (ஆகி)
"மாசில்லார்" கோடி யிருப்பாரல்லோ. [உண்டு

9 "பீடம் படைத்த பலியைத் தின்றோர் அந்த
பீடத்தில் ஐக்கியம் பங்கும் அடைவார்"
"பீடத்தைத் தின்றால்தான் ஐக்கியம் உண்டென்பார்
மூடரில் சேஷ்ட மூடரே ஆவார்".

10 "பேய்க்குப் படைத்த வஸ்துக்களைத் தின்றால் நீ
பேயுடனே ஐக்யம் ஆவாய்" என்றார்;

"பேயைத் தின்றால் மட்டும்" "ஐக்கியம்" உண்டு
[என்று
"பேய் பிடித்தோர்" மட்டும்தான் "சாதிப்பார்".
1 கொரி. 10: 17, 21

11 ஏசு தன் 'பிதாவை'த்தின்றே பிழைக்கிறார்,
தாசரும் "ஏசை'த் தின்றே பிழைக்க,
ஏசின் வார்த்தை ஜீவன் ஆவியால் கொள்ளவே
"நேசர்" "செய்" என்றார் "நினைவு கூற".
யோவான் 6: 57; '4: 19; வெளி. 30: 20.

12 தேவ ராஜ்யம் புசிப்பிலும் குடிப்பிலும்
தேவன் சொன்னார் "இல்லை" "இல்லை" என்று
தேவன் ஏசின் மூலம் "புசி" "குடி" என்றால்
தேவார்த்தம் எழுத்தின்படி அன்று.

13 யேசின் வார்த்தைப்படி "அப்பம்" "ரசம்" இப்போ
நேசர் நினைத்துப் புசிக்கும் போது,
யேசின் மூலமே 'ஸ்தோத்ரபலி" ஏற்றாரும்,
யேசினில் "தேவனை" நாம் துதித்து.

14 யேசுவையன்றி பாவப்பலி வேறில்லை,
யேசு "ஹைஹ பிரீஸ்ற்றாய்" நம்மைப் படைத்தார்
யேசு ஹைஹ பிரிஸ்ற்றாயே என்றுமே நிற்பதால்"
நேச தேவன் வேறே "பிரிஸ்றே" வேண்டார்.
எபி. 10: 14; 7; 25

15 "தேவன்" வார்த்தை ஆத்மா ஆவிக்கு ஆகாரம்
தேவன் சொன்னார் "மனு" தான் பிழைப்பான்;
"தேவன் வார்த்தை" நம்பி அதைப் புசிப்போர்தான்
"தேவனுடன் இங்கே சஞ்சரிப்பான்".

16 "தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டார்—என்பதை"
"தேவன்" "யேசு"வில் "தியானித்துண்பதே"
"தேவ மனுஷன்" தன் சாயலுக்கொப்பாக
தேவன் மாற்றும் மாரகசியமே.

எரேமி 4: 21. 2 கொரி 3: 18, பிலி 3: 21

17 யேசு "பாவி"த்தன்மை போட்டுவந்தார், இனி
"தாசர் தூங்குவோரை" சேர்க்க வாரார்,
யேசு மகிமையாய் மேகத்தின்மேல்வந்து,
நேசர் எழும்ப "சத்தம்" இடுவார்.

18 "கர்த்தருக்குள்ளே மரித்தோரையும்" இங்கே
"கர்த்தருக்குக் காத்திருப்போரையும்",
கர்த்தர் "எக்காள சத்தம் எழுப்பி", மாற்றும்
"கர்த்தருடனே இருக்க" "என்றும்".

19 "முதல் உயிர்த்தெழுதல்" பங்கு எனக்குண்டு,
"இதில் எழும்புவோர் பாக்கியராம்;"
"முதற் பலனான" "யேசுவின் சாயலாய்",
"ரதம்"—"மேகம்" ஏறிப்போவார்களாம்.

20 தேவன் வார்த்தை'கற்றோர்' ஞானஸ்நனம் பெற்றோர்,
தேவன் "அப்பம் ரசம்" தினம் பெற்றோர்;
தேவசுதன் ரத்தத்தால் கழுவப்படேல்
"தேவன் சபைக்" கோர்காலும் "ஆளாகார்".

---

## 10

## உன் தேவனுகிய கர்த்தருடைய

## ஓய்வு நாள்

யாத், 20: 10.

1 கர்த்தர் "ஆறில்" சிருஷ்டிப்பை முடித்துப்—பின்
கர்த்தர் "ஏழாம் நாளில் ஓய்ந்திருந்தார்".
கர்த்தரே "ஏழாம் நாளை" "ஆசீர்வதித்து"
"கர்த்தர்" அதைப் "பரிசுத்தம்" என்ருர்.

2 கர்த்தர் தாமே இளைப்பார்தல் வேண்டிராமல்
கர்த்தர் மனுவுக்கு "மாதரி" காட்டி,
கர்த்தர் சொன்னுர் தேகவேலை யாவுந்தள்ளி,
"கர்த்தர் நோக்கி இளைப்பாறித்துதி".

3 "கர்த்தரின் நாளில்" கர்த்தரைக் காத்திருந்து,
கர்த்தரைப் போற்றித் துதிப்பதாலே,
கர்த்தர் "பரிசுத்தம்" பெலன் "நீயடைந்து",
கர்த்தர்க்காய் ஜீவிப்பாய் இவ்வழியே.

4 கர்த்தர் வார்த்தைப்படி "ஏழாம் நாளில் ஓய்ந்து",
'கர்த்தரின் நாள்' "பரிசுத்தம்" என்றே,
'கர்த்தரின் நாள்' மனமகிழ்ச்சி நாளென்பார்
கர்த்தரின் நாம மகிமைக்கென்றே.

5 கர்த்தரில் நீ அப்போ மகிழ் கொண்டாடுவாய்,
கர்த்தரும் "நீ என் மகிழ்ச்சி" என்பார்
"கர்த்தர் உன்னை போஷித்து மேன்மைப்படுத்தி,
கர்த்தர் உன்னைக் காத்துக்கொள்வேன்" என்ருர்.

6 கர்த்தர் வேறெந்த நாளையும் குறிக்காமல்,
கர்த்தர் சொன்னார் "ஏழாம் நாள்" "கர்த்தர் நாள்".
கர்த்தர் சொன்ன வார்த்தை என்றும் மாறாததே
"கர்த்தர் நாள்", நமக்கு ஏற்ற "நல்நாள்".

7 "கர்த்தர் தன் வார்த்தையை தானுமே கைக்கொண்டார்,
"கர்த்தர் சீஷரும் அதுவே செய்தார்,
கர்த்தர் மாற்றவில்லை, சீஷர் துணிந்தில்லை,
கர்த்தர் சத்ரு "பாப்பு" தான் மாற்றினார்:

8 "தேவன் வார்த்தைவிட்டு" மனுவார்த்தை செய்வோர்
"தேவப் பிரியரோ?" நீரே சொல்லும்,
"தேவ சுதன் பிரதிநிதி நானே" என்பான்,
"தேவ ஊழியனோ"? நீரே பாரும்.

9 கர்த்தர் கொடுத்த "ஏழாம் நாள்" தாள் நன்மையோ?
கர்த்தரைத் தள்ளும் "முதல் நாள்"த்தானோ?
கர்த்தரின் "நித்திய ஓய்வுநாள்" எந்த நாள்
கர்த்தரின் "ஏழோ" "பாப்பின்" 'முதலோ"?

10 கர்த்தர் வார்த்தை தள்ளி "பாப்பு வார்த்தை" கொண்
கர்த்தருக்கு "ஏதுவும்." குறையோ? [டால்,
"கர்த்தரால் புகழ்ச்சி" பெற ஆசையாயின்,
"கர்த்தரை"த் தள்ளி "பாப்பை" ஏற்பாயோ?

11 கர்த்தர் தெளிவான வார்த்தைவிட்டு—மாறாய்
கர்த்தர் "சத்ரு" வார்த்தை பற்றி வந்தால்;
கர்த்தர் வரச்சே "உண்மை ஊழியன்" என்பாரோ,
கர்த்தர் 'கனம்' நீ கொடாதிருந்தால்?

12 கர்த்தர் "ஏழாம் நாள் ஓய்வு நாள்" கைக்கொள் என்று
கர்த்தர் 'மனுவு'க்குச் சொல்லி—மாறாய்
கர்த்தர் "முதல் நாளும்" கொள்ளலாமென்றாலோ,
கர்த்தர் "தேவன் ஆகார்"—மெய்யே, மெய்யாய்.

13 "ஒன்று நம்பர் முதல் ஆறும்", சீசா விஷம்
தின்றுதற்கு "ஏழில்" சர்பத், சுகம்
என்றுண்மை கேட்டும் நம்பர் "ஒன்றில்" சாப்பிட்டால்
அன்றே அடைவான் தன் உயிர் நாசம்.

14 "ஏழில் ஒன்றுதான் கருத்து" என்று சொல்லி,
"ஏழு" தள்ளி "நம்பர் ஒன்று" கொள்ள,
மோழை ஜனங்களை வஞ்சித் "தந்திக்றிஸ்தே"
ஆளவே ஆளுறானடிமையாக.

15 "முதல் நாளை" ஓய்வுநாளாக கொள்வோரும்,
"மதலை நீர் தெளித்தல்" ஏற்போரும்,
"சுதன்" எழுப்புமுன் "மோட்சம் உண்டென்போரும்,
பிதா " அந்திக்றிஸ்தி" னடிமையாகும்.

16 "தேவன் ஒன்று" தேவ சித்தம் "ஒன்றே"-அப்போல்
தேவ "சன்மார்க்கப் பிரமாணம் ஒன்றே";
தேவன் 'நித்யர்' 'பூர்ணர்' மாறாதவர்—அப்போல்
தேவ "சந்மார்க்க நூல்" மாறாததே.

17 தேவ சந்மார்க்க நூல் "மனு ஜாதி மீற
தேவ சுதன் நிறைவேற்ற "வந்தார்";
"தேவப் பிரமாணம் அழிக்க வராமல் நான்
தேவ சித்தம் செய்ய வந்தேன்", என்றார்.

18 தேவ சுதன் "மனு பிரதிநிதி" யாக,
"தேவ நூலை" நிறைவேற்றினதால்,
"தேவ புத்ரரும்" கைக்கொள்ளல் கடமையே,
தேவப் பிரியராகார் மீறினுக்கால்.

19 தேவப் பிரமாணம் "பாவிக்குத்தான்" பகையாம்
தேவப் புத்ரர்க்கோ "சந்தோஷமேயாம்"—
"தேவனாலேதாம் பிறந்ததை ரூபித்தகே",
தேவா வல் கொண்டதில் "ஓடுவாராம்".

20 'ஏக' தேவன் பிரமாணங்கள் 'ஒன்றே' அதில்
ஏகம் மீறி மற்றெல்லாம் செய்யினும்,
"ஏகமாய் மீறுதலாகும்"—சொன்னார் தேவன்
லோகம் "வேசித்தாயால்" என் சொன்னாலும்.

21 "தேவனை உன் முழு இருதயத்தோடும்,
தேவன் சிஷ்டிகளில் உன் பிறனை,
ஆவலாய்த் தன்னைப்போல் நேசிப்பதும் இரண்டும்
தேவ சுதன்—சுருக்கம் கற்பனை"

22 தேவ சுதனின் "இக்கற்பனை" கைக்கொள்வோர்,
"தேவ கற்பனைகள்" ஒன்னும் தள்ளார்;
"தேவன் வார்த்தையிலே" "தேவன் சொன்னார் என்
ஆவலாய்ச் செய்வார் மேலக்கேள்வி கேளார். [ருல்,

23 அண்டங்கள் "நின்று" மீட்கப்பட்டோர் இப்போதான்
உண்டே "மகாராஜ்யம்" "தேவன்சபை",
ஆண்டாண்டங்கே சேர்ந்த ராஜர் ஆசாரியர்,
பண்டுமுதல் "கண்டதெந்தநாளை".

லூக். 15: 7; மத். 13: 43; 25-34; 26: 29. மாற்கு 1: 14, 15; 4: 11; 14: 29; லூக். 4: 28; 13; 18; 14: 15; 22: 16; 18; அப். 12: 22, 23; 20: 28. 1 கொரி 5: 24; வெளி 1: 10; 2 கொரி 5: 1; யோ. 14: 2; சங். 102: 26—28; 1 பே. 2: 9; வெளி 1: 6; எபி. 4: 9, 10.

24 இந்த "ஏழாம் நாள்" நித்ய ஓய்வுநாள் நிழல்
அந்த "இளைப்பாறுதல்" முன்னுசிக்க
தந்த "கர்த்தர் நாளை" தள்ளிவிட்டான் "பாப்பு"
தந்திரமாய் தன்னைக் "க்றிஸ்து" ஆகிக.
கலா. 2: 17; எபி. 8: 5; 10: 1; 2 கொ. 1: 22 எபே. 1: 13, 14;
தானி. 7: 25: 2 தெச 2: 3, 4; 8: 9,

25 கர்த்தர் சொன்னார் தான் "ஓய்வுநாள் ஆண்டவர்";
கர்த்தர் நாள் "என்றால்" "ஓய்வுநாள்" அல்லோ;
"கர்த்தர் நாள்" "ஓய்வு நாள்" ஏழாம் நாள்—கைக்
கர்த்தரின் அன்பான சீஷரல்லோ. [கொள்வோர்
மாற்கு, 2: 27, 28; லூக். 6: 5; எசா. 58: 13, 14; 56: 2;
யோவான், 13: 23; 14: 15, 23; 15: 10, 14.

26 கர்த்தர் நாள் ஓய்வு நாள் ஆண்டவர் என்றதால்
கர்த்தரை லோகம் கனப்படுத்த,
கர்த்தர் அன்பன் 'கற்பனை ஓய்வுநாளைத்தான்
கர்த்தர் நாள் என்றான் "நினைவுகூற".
நீதி. 3: 9; தானி. 4: 37; யோ. 5: 23; யாத். 20; 10, 11;
1 சாமு. 2: 30; வெளி. 1: 10; யோ. 16; 13, 14.

27 "ஏழாம் நாள்" "ஓய்வு நாள்" யூதனுக்கென்றாலோ,
"ஏழாம் நாள்" கைக்கொள்ள "நானும் யூதன்"
ஏழை "நாய்" மெய் இஸ்ரேல் ஆனேன் விஸ்வாசத்
கேள்! ஆபிரகாம் வாரீஸ் நான் ஆயினன். [தால்
ரோம. 2: 29; 9: 4—8; பிலி. 3: 13 கலா. 6: 15, 16; 3: 7, 9, 29.

---

## 11

**Axiom** = பிரத்தியக்ஷ முதனியாயம்;

பிரத்தியக்ஷ மூல நியாயம் } பிரத்தியக்ஷ சித்தாந்தம்; மூல சூத்திரம்;

1 தேவன் "ஒன்றே" "அவர் சித்தம் ஒன்றே," மனு
தேவனைச் சேர "வழி"யும் "ஒன்றே";
தேவன் தந்த வழி சமீபம் "நேர்வழி",
தேவன் "நேர்வழி "சுருக்கம்"—பாரே.

2 தேவன் "நித்யர்" "மாறுதவர்" "சம்பூரணர்",
தேவன் "சித்தம் வழி" அத்தன்மையே;
தேவன் "சித்தம்" "வழி" பல இருக்காதே,
தேவ "சர்வ ஞானம் தந்ததொன்றே".

3 "தேவன் ரூபம்" "அன்பு" சம்பூர்ண நன்மையே",
தேவன் "மனுவை" "தம் சாயலாக்க";
தேவன் தந்தார் வழி க்ருபைகள் நிறைத்தே,
தேவன் க்ருபையால் "தம்வீடு" சேர்க்க.

4 தேவன் தாமே "சத்யம்" "ஜீவன்" "அன்பு" "ஒளி"
தேவன் வார்த்தைக்கும்—இதெல்லாம் உண்டே;
தேவன் தம் வார்த்தையில் "எதிர்" "மாறுச்" சொன்
தேவன் "அன்பு" "சத்யம்" பங்கமாச்சே. [ னல்,

5 தேவன் வார்த்தை தேவத்தன்மை உள்ளதாலே
தேவனே "நான் பொய்யுரையேன்" என்றார்;
"தேவன் சுத்தம் "கேட்டுப் பின்பற்றுவோர்க்கு"மெய்
தேவ சுதனே "ஜீவன்" ஆகுவார்.

6 தேவ சத்ரு சொன்னான்—"தேவன் வேதத்திலே
தேவன் "சத்யம்" சொல்வார்—எல்லாம் சொல்லார்;
தேவ அதிகாரம் பெற்றோர்மட்டும் அதில்
தேவ சித்தம்போல் கூட்டிக் குறைப்பார்".

7 தேவன் வார்த்தை "நிற்க" "மனு ஞானம் வேண்டாம்,
தேவனைப்போலவே "தானே நிற்கும்";
தேவன் வார்த்தை "கற்க" "மனு யுக்தி" வேண்டாம்,
தேவன் சொன்னார் "சுத்தாவிதான் வேண்டும்".

8 தேவன் 'ஒளி' "ஜீவன்"—வார்த்தையு மதுவே
"தேவன் வார்த்தை" செல்லுமிடமெங்கும்
'தேவாவியாலது' ஒளி' ஜீவன்' ஆகி
"தேவ புத்ரன்" 'தேவன் வீடு' சேர்க்கும்.

9 தேவனுக்கும் பாவியான மனுவுக்கும்
'பாவம் செய்த தூரம் எவ்வளவோ ?
தேவன் "அறிவாரே" மனு "முடியாதே"
தேவன் பார்த்து "வழி" தந்தாரல்லோ.

எசா. 59: 16

10 தேவனை விட்டு மனு விலகி—அவன்
தேவர்களைப்போல் ஆக வேண்டி,
'தேவ க்ருபை' புத்தி கேளாமலே போறான்
தேவ "எத்னம்" "வார்த்த". கோணலாக்கி.

11 தேவனுண்டாக்கின "சிருஷ்டி மனு," தன்னை
தேவனென்று எண்ணி சாதிப்பதால்,
தேவ துரோகி சாத்தான் எண்ணத்தில் பங்கானான்
தேவன் சிஷ்டி "சாகாதென்பதினால்".

12 தேவன் தந்த 'வழி' வார்த்தை தள்ளுவோர்க்கு
தேவன் நித்ய ஜீவன் வேண்டாதாலே,
தேவன் "சிஷ்டி சடம்" ஆக்கினை உண்டல்லால்
தேவன் "நித்ய ராஜ்யம்" பங்கில்லையே.

13 என் மகனே! லோக ஞானமும்! 'வேஷமும்'
என்னிமித்தம் நீயே விட்டு வந்தால்,
என் வார்த்தை போதிப்பேன், எல்லாம் விளக்குவேன்
என்னுவி உன்னில் நிலைத்திருந்தால்.
2 கொரி. 6: 16, 17. 18; 7: 1; 1 யோ 2: 20, 27.

14 அஞ்சவேண்டாம் நீ என்னுடையவன் துன்பம்
மிஞ்சாமலே நானே பார்த்துக்கொள்வேன்;
பஞ்சைப்போல் ஒருகால் பாடுபடும்வேளை,
கெஞ்சும் உன்னை என் கையால் தாங்கிடுவேன்.

15 சோதனை துன்பம் எங்கேயோ அங்கே வழி
வேதனை தப்ப இருக்கும் பாரே;
சாதனையாலே பொறுமை நீ பெற்றிட
'வேதன்' வார்த்தைப்படி தாங்குவாரே.

---

## 12

நொறுங்குண்ட இருதயம்—நருங்குண்ட ஆவி—சங். 34: 18

1 நொறுங்குண்ட இருதயம் தள்ளமாட்டீராம்,
நறுங்குண்ட ஆவியின்மேல் தாகமாம்.

*Ch.* வாவேன் பாவி! வருவோனைத் தள்ளமாட்டேனே,
பாரேன்! ஜீவன் ஜெயம் வீடும்—ஈவேனே.

2 ஆவலாய் உம் பாதம் வாரேன், பாவம் நீக்குமேன்,
தேவ சமாதானம் தந்து—ஆளுமேன்.

3 உள்ளங்கையில் வைத்து என்னைக் காக்கவில்லையோ,
தள்ளாடுங்கால் கைவிட்டென்னைத்—தள்வீரோ.

4 கடைச்சத்ரு கோஷ்டம் இருள் மோதவந்தாலும்,
கடைமட்டும் கண்மணிபோல்—காத்திடும்.

5 யேசுவே! நீங்காமல் நின்றென்—ஆவி தாங்குமே
மாசு தீர்க்கும் ஜெயம் தரும்—ரத்தமே.

6 நீரே தந்த பிள்ளைகள் உம் வீடு சேரவே
சோரம் போக்குமிருள் நீக்கிக்—காருமே

7 ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம், பாவம் துன்பம்—இம்மையில்
ஸ்தோத்ரம், சுத்தம் இன்பம், அங்கே என்றுமே.[தானே

8 மாலை தூங்கி உம் சாயலால் காலை விழிப்போம்,
காலையில் சாவாமை பெற்று—பிரியோம்.

---

## 13

### மரணவிருள்

1 உள்ளங்கையில் ஏந்தி என்னை
காத்துவந்தீரல்லவோ?
தள்ளாடுங்கால் தள்ளவென்று
தூக்கிக் கொண்டு வந்தீரோ.

2 "தஞ்ச" மென்ற ஏழையை நீர்
தள்ளமாட்டேன் என்றீரே
கெஞ்சும் நேரம் பக்கம் நின்று
சஞ்சலங்கள் தீர்த்தீரே.

3 ‘இருள் நேரம்’ மருளாமல்
இந்த மட்டும் காத்தவர்,
அருள் ஒளியால் காரிருளின
“அந்தம்” மட்டும் காத்துவா.

4 கிட்டுதல்லோ எந்தன் வேளை
சத்ரு நேரில் சந்திக்க,
முட்டும் இருள் பள்ளத்தாக்கில்
“ரத்தங்” கொண்டு ஜெயிக்க.

5 ஒளியாலே இருள் நீக்கும்
இருள் சூழ்ந்த தேவனே,
ஒளியருளால் மரண இருள்
வெருண்டோடச் செய்யுமேன்.

6 சிதறுண்ட வென்னிதயம்
ஒரு முகமாக்கியே,
பதறாமல் உம்மை நோக்கி
‘மரந்திருக்கச் செய்யுமே.

7 யேசின் ரத்தம் வல்லமையை
ஏழைப் பாவி என்னிலும்
மாசு நீக்கி, நேசர் சாயல்
காணும்படி காட்டுமே.

8 மண்ணின் ஆசா பாசங்களும்
“மனம்” மருளச் செய்யாமல்,
விண் மகிமை தங்கும் மீட்பர்
காட்சி தாரும் தப்பாமல்.

9 க்ருபை, தேவக்ருபை தேவை,
க்ருபை தேவ க்ருபையே,
க்ருபை இன்னும் காக்கவேண்டும்,
தேவா! க்ருபை தாருமே.

---

## 14

### "ஓய்வு நாள்"

"ஓய்வு நாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பாயாக; ஏழாம் நாளே உன் தேவனாகிய கர்த்தருடைய ஓய்வுநாள்" யாத். 20: 8,10.

1 சர்வலோக சிஷ்டிகரே
மெய் வணக்கம் பாத்ரரே
சர்வ சிஷ்டி உம் சமுகம்
ஏற்றும் துதி என்றுமே.

2 இந்த நாளைப் பாடுள்ளோர்க்கு
இளைப்பாறும் நாளாக,
"ஆசீர்வாதம்" "பரிசுத்தம்"
ஆக்கினீர் க்ருபையாக.

3 லோக வேலை கவலையும்
தள்ளி உம்மை நோக்குவேன்;
தாகம் தீர்க்கும் "ஜீவதண்ணீர்"
உள்ளம் பொங்கச் செய்யுமேன்.

4 சென்ற நாட்கள் நீர் நடத்திய
தயவெல்லாம் நினைத்து
இந்த நாளில் நான் வணங்கி
பாதம் வீழ்ந்தேன் துதித்து.

5. "பரிசுத்தர்" "பரிசுத்தர்"
"பரிசுத்தர் தேவனே";
பரிசுத்தர் என்று போற்ற
பரிசுத்தம் செய்யுமே.

6 எந்தன் பாவம் — மாம்ச இச்சை,
லோக நேசம், துர்க்குணம்,
மந்தமனம், வாக்கு க்ரியை,
தன்னிலுள்ள லட்சணம்.

7 இத்தனையும் யேசின் முகம்
பார்த்து—"ரத்தம்" நோக்கியே
அத்தனே! நீர் மன்னித்தென்னை
"ரத்தத்தால்" கழுவுமே.

8 சுத்த ஆவி அக்கினியால்
ஆவி, ஆத்மா, தேகமும்
சுத்தமாக நீர் எரித்து
பாதம் வைத்தே காத்திடும்.

9 ஸ்தோத்ரம், ஞானம், வல்வமையும்
மகிமையும் உமக்கே
ஸ்தோத்ரம், புகழ்; கனம்துதி
இன்றென்றுமுண்டாகவே

10 இந்த நாள்தான் இனிவரும்
நித்ய ஓய்வுநாள் 'நிழல்'
அந்த நாளின் "ஸ்தோத்ரபலி"
இங்கேயே துடங்குதல்.

---

## 15

"ஜெந்ம நாள்"

1 இந்த நாள்தான் என்னுடைய
'இவ்வுலக' ஜென்ம நாள்;
நொந்து மனம் நேர்ப்படுத்த
ஏற்ற நல்ல க்ருபை நாள்.

2 சென்ற நாட்கள் நீர் நடத்ய
தயவெல்லாம் நினைத்து
இந்த நாளில் நான் வணங்கி
பாதம் வீழ்ந்தேன் துதித்து.

3 சென்ற காலம் தேவையெல்லாம்
தந்து காத்த தேவனே,
பெற்ற நன்மை எதற்கேனும்
முற்றும் நான் அபாத்ரமே.

4 க்ருபை, க்ருபை, க்ருபை, தேவா!
பெற்றதெல்லாங் க்ருபையே;
'க்ருபை' என்று எந்தனுள்ளம்
ஏற்றும் ஸ்தோத்ரம் என்றுமே.

5 சென்ற நாட்கள் "கதை போலும்"
"வெள்ளம் போலும்" போயிற்றே;
நின்ற நாளில் ஓர் முகமாய்
உம்மைப் பற்றச் செய்யுமே.

6 எந்நேரமும் இடர் முட்கள்
இருந்து கொண்டிருக்குதே;

நன் மனசில் பொறுமையும்
சாந்தமுடன் தாருமே.

7 சுத்த ஆவி அக்கினியால்
ஆவி, ஆத்மா, தேகமும்,
சுத்தமாக நீர் எரித்து
பாதம் வைத்தே காத்திடும்.

8 சிதறுண்ட வென்னிதயம்
ஒருமுக மாக்கியே,
பதறுமல் உம்மை நோக்கி
'மர்ந்திருக்கச் செய்யுமே.

9 ஏசின் ரத்தம் வல்லமையை
ஏழைப் பாவி என்னிலே,
மாசு நீக்கி, நேசர் சாயல்
காணும்படி காட்டுமே.

10 இருள் நேரம் மருளாமல்
இந்த மட்டும் காத்தவா;
அருள் ஒளியால் 'காரிருளின்'
அந்தம் மட்டும் காத்துவா.

11 ஸ்தோத்ரம், ஞானம், வல்லமையும்
மகிமையும் உமக்கே;
ஸ்தோத்ரம், புகழ், கனம், துதி
இன்றென்றும் உண்டாகவே.

## 16

"கிறிஸ்துவுக்கு உடன் சுதந்தவாளி" ரோ 8: 17.

'தேவ புத்ரன்' ஆன பின்பு
தேவையுண்டோ? ஏழைக்கு இன்னும்
சாவு நீக்கும் "ஜீவ வழி"
தேவ மைந்தனே.

1 பாவத்தில் நான் செத்திருந்தேன்,
பூாவஞ்செய்தே திரிந்தலைந்தேன்;
பட்சம் வைத்து கைப்பிடித்தார்,
நிச்சயமே! என்னையும் மீட்டார்.

2 லோக மாம்ச வலை சிக்கி,
வேகம் போனேன் அழிவை நோக்கி,
க்ருபையால் தடுத்தாட்க் கொண்டார்,
"வரு பாவி ஓர்காலும் தள்ளார்"

3 "சன்மார்க்கன்" வழி நடந்தேன்,
"துன்மார்க்கம்" நெஞ்சம் வைத்திருந்தேன்;
ஆவியாலே நான் பிறந்தேன்,
பாவம் நீங்க 'சாட்சி' யும் பெற்றேன்.

4 துன்பம், துக்கம், எத்தனையோ,
பின் வாங்குதலும் எத்தனையோ;
அன்பினால் அரவணைத்தார்,
இன்னும் ஏழை தாங்கியே வாரார்.

5 இந்தமட்டும் காத்து வந்தார்,
அந்தம் மட்டும், வர் பார்த்துக்கொள்வார்;
சத்துரு மேல் ஜெயம் ஈவார்
பத்திரமாய்த் தம்மிடம் சேர்ப்பார்.

## 17

"என் ஆத்மாவே கர்த்தரை ஸ்தோத்திரி மறந்துவிடாதே"

ஸ்தோத்திரம், ஸ்தோத்திரம், என் தேவனே,
ஸ்தோத்திரம் உமக்கே எந்நாளுமே.

1 பாவத்தில் வெகு நாட்கழித்தேன்,
பாவமே ப்ரீதியாய் செய்து வந்தேன்;
பாவியின் நேசரே! கைப்பிடித்து,
பட்சமாய் அழைத்தீர் நான் பின்வந்தேன்.—ஸ்தோ

2 பாவிகளில் பிரதானமே நான்,
பாவங்களோ தான் கடல் மணற்போல்,
பாவ நாசனே! நீர் சருவேசன்,
பாவமே நீக்கும், ஒளி இருள்போல். —ஸ்தோ

3 பாவங்கள் மன்னித்தீர், பிள்ளையானேன்,
பாவ வழிகளையும் வெறுத்தேன்;
தேவன்பை ருசிக்க க்ருபை பெற்றேன்;
தேகம் இருக்குமட்டும் துதிப்பேன். —ஸ்தோ

4 தேவ பிதா! நீரென் மேய்ப்பரல்லோ,
குறைவு ஏதும் எனக்கு உண்டோ?
தேவா— சுதன் தன்னை தந்தும்—பின்னே
தேவை யெல்லாம் எனக்குத் தாரீரோ? —ஸ்தோ

5 வான்புவி எங்கும் உமக்கு நிகர்
அதிசயம் செய்யும் தேவனுண்டோ?
வான்மாடி பாவியைச் சேர்ப்பதற்காய்
வையகம் சுதன் போல் பட்டாருண்டோ. —ஸ்தோ

சங். 89: 6

6 இந்தமட்டும் நீரென் ஜீவன் தந்தீர்,
வந்த இடர்களில் தாங்கி வந்தீர்,
அந்தம் மட்டுமே காக்க வல்லோர் நீர்,
ரத்தத்தால் மீட்டீர் ஏன் கைவிடுவீர்? —ஸ்தோ

7 வான் புவி எங்கும் உமக்கு நிகர்
ஆசை மணாளன் எனக்கு உண்டோ?
வான் மாடி என்னை நீர் சேர்த்திடுங்கால்,
மன்னா! உம் அன்பில் சுகிப்பேனல்லோ? —ஸ்தோ

8 ஆயிரம் நாவுகள் பெற்றாலுமே
உம் செயல் போற்ற போதுமானதோ?
உயிர் தரும் காலம் அத்தனையும்
உள்ளதொன்றாலேயே துதியேனோ? —ஸ்தோ

---

## 18

தேவ, தேவ பிதாவே, ஸ்தோத்திரம்,
தேவமைந்தனே! ஸ்தோத்திரம்,
தேவ ஆவியே! உமக்கு ஸ்தோத்திரம்,
ஸ்தோத்திரம், ஸ்தோத்திரம் திரியேகரே.

1 நரக பாதையின் நடுவிலே,
நாசம் நோக்கியே போகையில்,
பரலோகாதிபன் தானே கண்டு,
பட்சமாய் என் கைபிடித்தனர்.

2 பாவ இதயம் ஆவியால் மாற்றி,
யேசு மீட்பரை நேசிக்க,
தேவ ஆவியால் என்னை ஆட்கொண்டு,
தினம், தினமே நடத்துவார்.

3 சத்துரு சாத்தான் வார்த்தை நம்பியே,
வேஷத்தார் கூட்டம் சேர்ந்திட்டேன்;
சத்ய ஆவியால் போதித்தார்—இப்போ,
தேவன் வார்த்தை நம்பிப் பற்றுரேன்.

4 தேவன் வாத்தையை நம்பிப் பற்றினுல்,
தேவனுல் தான் கனமுண்டாம்;
தேவ ஆவியின் சந்தோஷம், பலம்,
திவ்விய வார்த்தைத்தான் கொடுக்குமாம்.

5 பாவ உளையில் நின்று தூங்கியே,
கன் மலையின் மேல் நிறுத்தி,
வாயிலே புதுப் பாட்டையும் தந்து,
சத்ருமேல் ஜெயம் தருகிருர்.

---

## 19

1 யாருமே துணையில்லையே எந்தன்,
ஆத்துமா மிகத் தொய்யுதே;
சோரும் ஆவியின் நொம்பலங்களும்,
மேலும் மேலுமே மோதுதே.

2 காற்றும் கடலும் கொந்தளிக்குங்கால்,
சீஷர் தேற்ற அமர்த்தினீர்;
நேற்றும் இன்றென்றும் மாருு யேசுவே,
ஏழையின் திகில் நீக்குவீர்.

3 தன்னைத் தந்தென்னைத் தடுத்தாட்கொண்ட,
தயா பரா! எந்தன் தேவனே;

என்னைக் கொண்ட நின் ரத்தம் என் கெதி,
யேசுவே என்னை நோக்குமே.

4 தேற்ற வந்த சுத்தாவியே, எந்தன்
சஞ்சலங்களை யுணர்ந்தே,
ஆற்றி முற்றுமாய் ஏசின் சொல்ப்படி,
ஆண்டு கொள்ளும் என் தேவனே.

5 "பூர்ண இருளின் பள்ளத்தாக்கில்" என்
ஆத்துமா சோரம் போகாமல்,
சர்ணந் தந்து சத்துரு மேல் ஜெயம்
தாரும் 'ரத்தம்' வீண் ஆகாமல்.

6 திக்கற்ற ஏழை கைவிடாமலே
திரியேகா! மாறு தேவனே!
பக்கம் வைத்தென்னை "செட்டையால் மூடி"
பஞ்சிலும் வெண்மையாக்குமே.

7 "கெஞ்சும் ஏழையைத் தள்ளவே மாட்டேன்,
சோர்ந்த ஆவியுந் தாங்குவேன்";
"அஞ்சேல்" என்றென்னை ஆண்டுகொண்டவா,
வேண்டுங் கிருபையைத் தாருமேன்.

---

## 20

"நான் எழுந்து என் தகப்பனிடத்திற்குப் போய்"

1 துன்பங்கள் வர்த்தமாயினும்,
ரக்கத்தின் செயலாம்;
கெட்ட குமாரன் தன்னையும்,
மனந் திரும்பச் செய்ததாம்.

*Ch.* பசியால் வருந்தேன்
பசியால் வருந்தேன்—நானேன்
ப்ரதேசம் திரிவேன்
என் பிதா வீடோ! களஞ்சியம்;
கைகளோ! தயாளம்.

2 பாவத்தால் எனக்கென் லாபம்
'பசி' 'வெட்கம்' 'பயம்';
பிதா வீட்டில் நீன் எதேஷ்டம்,
இங்கே நான் லங்கணம்.

3 "நான் எழுந்து போய்" பிதா முன்னே,
வீழ்ந்து எல்லாம் சொல்வேன்;
'பிள்ளை' என அபாத்திரன்
ஊழியம் புரிவேன்".

4 பிதா மகன் வரக்கண்டு
உருகி, ஓடினன்.
கழுத்தைக் கட்டி அணைத்து
முத்தமுங் கொடுத்தான்.

5 "அப்பனே! துரோகி மன்னியும்"
எனப் "போதும்" என்றான்;
"செத்தவன் உயிரடைந்தான்,
"ஆர்ப்பரியும்" என்றான்.

6 இவ்விதமே தேவ அன்பு,
பாவிக்கும் காட்டுது;
மண் பிதா நேசத்தை விட,
விண்ணான் புறகுது.

"பிரதிஷ்டை"

## 21

1 பிதாவே! இம்மட்டுங் காத்தீர்,
இது உம் பேரன்பே;
அடியார் இக்நுபைக் கெல்லாம்,
முற்றும் அபாத்ரமே.

*Ch.* திரியேகரே, ஸ்தோத்ரம்,
திரியேகரே, ஸ்தோத்ரம் — நான் உம்
பாதம் பணிகிறேன்.
என் ஆவி, ஆத்மா தேகமும்
நீர் ஆளும், நான் தாரேன்.

2 சென்ற நாள் ஏழைகளை நீர்
அன்பாய்ப் போஷித்தீரே;
வந்தபெருந் துன்பம், சாவும்
விலக்கிக் காத்தீரே.

3 கர்த்தாவே! இந்தப் பாலனை
அன்பாய்க் கடாட்சித்தீர்;
அடியார்க்கிந்த தயவை
நன்றாய் உணர்த்துவீர்.

4 இந்நேரம் இந்தப் பிள்ளையை
உம் க ம் வைக்கிறோம்
ஏற்றாக கொண்டாசீர்வதியும்
உ சயல நமபினோம்.

5 இவனை உம் செட்டை நிழல்
வைத்தே காத்துக் கொள்ளும்;
ஜீவன், சுகம், தேவபயம்
தந்து வளர்த்திடும்.

6 அடியாரும் உம்முடனே
சேர்ந்து முயலவும்,
ஏக சிந்தை பொறுமையும்
எங்களுக் கீந்திடும்.

7 மற்றோர்கிவன் ஆசீர்வாதம்
ஆக ஜீவிக்கவும்,
ஜீவக்ரீடமும், ராஜ்யமும்
நீரே கடாட்சியும்.

8 அடியார் இதோ உம் வாக்கை
நம்பிப் பிடிக்கிறோம்;
க்ருபா சனத்தண்டை இப்போ
பணிவாய்க் கெஞ்சுறோம்.

9 கடை மட்டும் எங்களை நீர்
கண்மணி போல் காரும்;
எந்நாளுமே துதி ஸ்தோத்ரம்
ஏற்ற க்ருபை தாரும்.

---

**22**

"அஞ்சவேண்டாம்" என்ற
ஆண்டவர் நோக்கியே
அமர்ந்திருப்பேனே — அவரோ?
எனைக் கைவிடாரோ.

1 பாவம் பாழாக்கும் வனாந்தரத்தில்—கொடும்
சாபத்துள்ளாய்க் கெட்டலைந்தேன்—யேசு
சாபத்தை நீக்கினார் கேட்டேன்
மீட்கப் பட்டேன்.

2 ரத்தம் சிந்தி என்னை ரட்சிக்க—அனாதி
சித்தங்கொண்டு தன்னைத்தந்தார்—என்னை
நித்தமுங் காப்பதாய்ச் சொன்னார்;
க்ருபை தாரார்.

3 மர்ண நிழல் என்னை மூடும்போது—யேசு
சர்ணாந்தரப் பக்கம் நிற்பார்—அவர்
மர்ணத்தை எனக்காய் வென்றார்;
ஜெயம் ஈவார்.

4. நித்ரையடைந்த முன்னோர்களுடன்—நானும்
நித்ரை செய்வேன் "காலை" மட்டும்—மர்ண
"நித்ரையை" 'எக்காளம்" ஓட்டும்;
தாசர் கூட்டும்.

5 "நானே உயிர்த்தெழுதல் ஜீவன்" என்ற—கர்த்தர்
தாமே வந்து "கரை" நிற்பார்—க்ஷணம்
தானே "தம் சாயல்" மாற்றுவார்;
கூட்டிப் போவார்.

---

## 23

1 பாவி துரோகி, கெட்டலைந்தேன்,
மைந்தன் கொண்டு ரட்சித்தீர்;
ஆவியாலே போதித்தென்னை
ஆட் கொண்டு நடத்துவீர்.

*Ch* ஏழை வாரேன் ஏற்றுக்கொள்ளும்,
பெலவீனன் தாங்குமேன்;
ஏசின் ரத்தம் வல்லமையை
முற்லுங் காட்டிச் சேருமேன்

2 வெள்ளம் போல் என் நாட்கள் போச்சே,
செய்த வேலே சொற்பமே;
வள்ளலே! ப்ரியமாய் என்னுல்
செய்ததை முடியுமே.

3 தேவன் வார்த்தை பற்றுவோர்க்கு
மைந்தன் சாயல் ஈவாரே;
'ஜீவக்ரீடம்', '‘ஜெயாஸ்னமும்'
தப்பாமல் கிடைக்குமே.

---

## 24
## Birthday

1 ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம் என்றுமே
திரியேகா, உமக்கே;
ஸ்தோத்ரம் பெற்ற நன்மைக்காகவே,
என் உள்ளம் ஏற்றுதே

*Ch.* தேவனுக்குப்........பயந்தோர்க்கு
நன்மையே உண்டாம்;
தேவன் அறிவார், தேவன் அறிவார்...அவரை
தேவையெல்லாம் பார்த்துத் தீர்ப்பார்;
குறைவேதும் இல்லே (Repeat thrice)
குறைவே இல்லே.

2 என் ஆத்மாவே, கர்த்தரைத் துதி,
நன்மையால் பாரமே,
என் ஆவியே, பணிந்து சொல்வாய்
"முற்றும் அபாத்ரமே":

3 இம்மட்டும் நான் உம்மால் பிழைத்தேன்,
இரக்கம் க்ருபையே,
எம்மட்டும் இங்கென வைப்பீரோ,
நீரேதான் ஆளுமே.

4 சிறுமையில் ஏழை நினைத்து,
சந்தோஷ மாக்கினீர்;
பெருமை உம் நாமத்திலேதான்,
பாராட்டச் செய்குவீர்:

5 பிதாவே, என் விருப்பமெல்லாம்,
போது மட்டுந் தந்தீர்;
சதா உம் சமாதானம் தந்து,
நீரே ஏற்றுக்கொள்வீர்;

6 தேவா! இப்பிள்ளை உம் நிழலில்,
வைத்தே வளர்த்திடும்;
தேவன்பு, சுகம், நீடாயுளும்,
தந்தே ராஜ்யம் சேரும்.

---

## 25

"தயாபரரே"

1 தேவபிதா தன்சுதனை, தந்து என்னை மீட்ட அன்பை
ஆவலுடன் நான் துதிக்க ஆவிவேணும்—தயாபரரே

2 எத்தனையோ கல்வி, செல்வம், கனம் உடையோர்
இங்கிருக்க,
எத்தகையும் ஏழை என்னை, ஏன் தெரிந்தீர்,—தயாபரரே

3 அன்புருகி, நயம் காட்டி, அழைத்துவெளி கொண்டுவந்து,
இன்ப மொழியாலணைத்தீர் இடைவிடவோ?— தயாபரரே

4 அன்பால் எந்தன் நெஞ்சுடைத்து அணைத்தினிய
வாக்காலே,
"நம்பு"என்று ஆண்டுகொண்டீர்,நடத்தீரோ—தயாபரரே

5 ஆண்டுகொண்ட நாள்முதலாய் பாவிதுன்பம்ஆறுமாச்சு
"மாண்டஅன்பு" சுத்திசெய்யும் பண்பிதுவோ—தயாபரரே

6 தகப்பன் தாய் கைவிடுங்கால், எந்தைசொன்னீர்
காத்துக்கொள்வேன்,
அகம் மாற ஒளிகாண் "உற்றார்"-"மாற்றார்"—தயாபரரே

7 குகைத்தங்கம் காட்டு மாப்போல், மகச்சாயல்
காணுமட்டும்,
புகநீக்கும் அன்பு தணல் வைத்தெடுப்பீர்—தயாபரரே

8 கர்த்தாவே, நீர் சத்துருவாய் கத்தி ஓங்கி நின்றபோதும்,
"பர்த்தாவே" நான் இன்னும்நம்ப, க்ருபைதாரும்
—தயாபரரே

9 இரங்காயோ இச்சமயம் ஏசின்முகம் பார்த்தென்மனம்,
உறங்காமல் உம்மை நோக்க ஓர்முகம் செய்—தயாபரரே

10 இந்நேரம் சற்றும் இறங்கிலையேல், கடைச்சத்ரு
மோதும்
அந்நேரம் ஜெயம் தருவார் எவர்காணும்—தயாபரரே

11 அன்புதிறம் தான் பெருக்கி, என்னுயிரைமீட்பதற்காய்,
இன்பலோகம் விட்டுவந்தீர்—என்னசெயல்—தயாபரரே

12 லோகமுறை தெத்தெடுத்தல் மாறுகக்கழிசடையை
ஏகனுடனே சுதந்தரன் ஆக்கினதேன்—தயாபரரே

13 மழைநிற்க ஜெபம்கேட்டு உடன் உதவி தந்தோரே,
பிழைநீக்கி “விசுவாசம் வர்த்தி செய்யும்—தயாபரரே”

14 நெரிந்த நாணல் முரியேன் மங்குதிரி நானணையேன்,
சொரிந்த ரத்தம் உனக்காக என்றணைத்தீர்—தயாபரரே

15 ‘நெரிந்த நாணல்’ ‘அடிமை’ மங்கி எரிதிரி நானே
சொரிந்த ரத்தம் எனக்காக தள்ளுவீரோ? —தயாபரரே

16 நெஞ்சை ஆவியாலுடைத்து கெஞ்சுதற்கும் வாய் திறந்து,
“தஞ்சம்” என்று அண்டும் ஏழைதள்ளுவீரோ
—தயாபரரே

17 வாக்கு எனக்குத் தந்ததாலே காக்க நீர் பிணையுமாச்சே
சாக்குச்சொல்லித் தள்ளுவீரோ? என்றும் மாறு
—தயாபரரே

18 நின்னடிமை வாஞ்சையெல்லாம் “தேவன் வார்த்தை, பற்றுவதே
பின்னடியார் அப்படியே பற்றச்செய்யும்—தயாபரரே

19 பார்த்திடுமேன் ஏசின்முகம், பார்த்தனுதி பட்சம் வைத்து,
காத்திடுமேன் ஜெயம் தந்து கடைமட்டும்—தயாபரரே

20 இங்கிருந்து ஸ்தோத்ரப்பலி ஏசின்மூலம் ஏற்றுகிறேன்,
அங்கு வந்தஞ்சலிசெய்ய அருள் செய்யும்—தயாபரரே

21 என் பெலவீனம் உணர்ந்து என்னாவி தியங்கும்போது,
“என்கிருபை உன்னைத்தாங்கும்” என்றுசொன்ன
—தயாபரரே

22 கத்தும் ஏழைசத்தம்கேட்டு சித்தம் நீர் இரங்கி நித்தம்,
உத்தமமாய் உம்மையே நான் பற்றச்செய்யும்
—தயாபரரே

23 என்னுடைய நாமத்தினால் ஏதும்கேட்க நான் தருவேன்,
என்ற வாக்கை நம்பிநானும் இன்றுகேட்டேன்
—தயாபரரே

24 என்னாலேதான் கூடாதது ஏதுமுண்டோ? நம்பிக்
கேளேன், [—தயாபரரே
என்றஉம்மை விட்டு நானும் யாரைக்கேட்பேன்?

25 என்னுவி உன்னோடு என்றும் இதுபோல பேசிடுமோ
இன்னேரமே உன் சமயம்" என்றழைக்கும்—தயாபரரே

26 மரணம்வென்று ஜீவனுக்குள் கொண்டுவந்த கோமகனே,
மரணதிபன் நானும் வெல்ல மனந்தேற்றும்—தயாபரரே

27 ஆசை மணவாளனுடன் நான் ஆண்டாண்டாய் வாழ்ந்
திருக்க,
நேச ஆவியாலே என்னை ஆளாக்குவீர்—தயாபரரே

28 அற்ப விசுவாசியென்று அண்டுமென்னைத் தள்ளிவிட்
டால், [—தயாபரரே
தற்பரனே! யார்காண் உம்மைத் தாள்பணிவார்

29 "அன்புபொரித்" தழலாக்கி மண்பாசம் அறுத்துஎன்னை,
இன்பலோக "தேவன்சபை" சேர்த்தருள்செய்
—தயாபரரே

30 பாக்கியனாம்! அவனே! நீர்தெரிந்து மருவச்செய்து,
ஊக்கமாய் உம்தாள் காத்திடும் மண் எவனோ
—தயாபரரே

31 தேவபிதா தந்தகல்பம் தேவசுதன்—தேவன் மாம்சம்,
ஆவியால் புசித்து நித்தியம் வாழச்செய்த—தயாபரரே

32 "தேவன் மாம்சமான" "சத்யம்" தேவசுதன் தந்த "கல்பம்"
ஆவியாலே நானறுந்ததயை கொண்ட — தயாபரரே

33 "காயசித்தி கல்பம்" செய்ய கனபொருளை பாழாக்கி,
மாயன் வலைசிக்கி மாந்தர் மாளுகிறார்—தயாபரரே

34 தேவன் மாம்சமான 'சத்யம்' காயசித்தி கல்பம் என்று,
சாவின் வழிபற்றும் மண்ணோர், காணச்செய்யும்-தயாபரரே

35 "நானேவழி, சத்யம், ஜீவன்" என்றவகை "தேவன் மாம்சம்,"
ஆன செயலறிந்துண்டோர் ஜீவன் பெற்றார்—தயாபரரே

36 தேவன் மாம்சமான "சத்யம்" ஆவியால் புசிப்பதுவே,
தேவசுதன் தந்த 'கல்பம்' ஏற்கச்செய்யும்— தயாபரரே

37 ஏசின் 'மாம்சம்' 'அப்பம்' 'கல்பம்' விசுவாசம் கொண்டு உண்டோர்,
"வாசஸ்தலம்" என்னும் வாழக்ருபை தந்த—தயாபரரே

38 நேசர் 'மர்ணம்' 'உயிர்த்தல்' ஒட்டி பாசமற இங்கே நானும்,
"வாசம்செய்யும் "சித்தம்" "வாஞ்சை" நித்தம் தாரும்—தயாபரரே

39 நேசர்நிழல் தங்கிகனிவாய் மொழியால் நெஞ்சிழக்கி,
ஆசை தணல் நெய்பெருக்கி ஆண்டுகொள்ளும்—தயாபரரே

40 ஏசுவின் தாள் ஆசையுடன் தங்கிக்கற்று நான் பழகி,
நேசர் சாயல் நானும் ஆக மாசுநீக்கும்—தயாபரரே

41 இத்தளவாய் இப்புவியில் ஏந்திக்காத்துக் கண்மணி போல்
அத்தனே பராமரிக்க சித்தம் கொண்டீர்—தயாபரரே

**26**

அப்பா! ஏழைக் கிறங்காயோ?—வேளை கெஞ்சும்
இப்போ யேசு முகம் பார்த்து தப்பற என் நோய்கள்
தீர்த்து (or தப்பாறைகள் யாவும்)
இப்போதென் வாதை நீக்காயோ!

1 இந்தப்பாடு கஸ்தியெல்லாம்வந்ததே என் பாவத்தாலே,
எந்தவழி ஓடினாலும் நொந்து போனேன்· இதுகாலும்.

2 துன்பம் மிஞ்சி தூஷித்து நான் வம்பும் தும்பும் பேசி
[டாமல்,
அன்பிறங்கிக் க்ருபை காட்டி என் குறைகள் யாவும்
[ஓட்டி.

3 உன்தன் சுதன் ரத்தம் நோக்கி எந்தன் பாவம் யாவும்
[நீக்கி,
சொந்தமாக ஆண்டு தாங்கும் உந்தன் துதி உள்ளம்
[பொங்கும்.
(காரும் வந்த இடர் நீக்கித்தாரும்)

4 எப்படியும் பாவி என்னை தப்பிப்போக விட்டிடாமல்
ஒப்பில்லா கிருபைவைத்து இப்போதே சுகம் கொடுத்து

5 குஷ்டம், நோய், குருடு நீக்கி, துஷ்டப் பேய்கள் முடம்
[போக்கி,
கஷ்டம் நின்று விடுவித்தீர் இஷ்டம் கொண்டென்னை
இழுத்தீர். (or இஷ்டம் என்னவோ காண்பித்தீர்).

6 கெஞ்சிக் கெஞ்சி சுகம் பெற்று நஞ்சுடைய நாகம்போல,
நெஞ்சில் நன்றி அற்றிடாமல், வஞ்சம் பேய் போலாகி
[டாமல்.

**27**

தேவ, தேவ பிதாவே, ஸ்தோத்திரம்,
தேவ மைந்தனே, ஸ்தோத்திரம்,
தேவ ஆவியே, உமக்கு ஸ்தோத்திரம்,
ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம் திரியேகரே.

1 பாபிலோன் விட்டோம் என்றோர் சந்தையின்,
"பழங்கதை" கொண்டாடச்சே,
சாபம் நாசம் மத்தி நின்றிழுத்தீர்,
மகத்வ தேவ கிருபையே.

2 சேனைகள் கர்த்தர் தாமே எங்களை,
ஆண்டு நின்று வேண்டும் நன்மைகள்,
ஏனையும் குறைவின்றி தந்தின்னும்,
கண்விழி போலுமே காத்திட்டீர்.

3 சென்ற நாள் எமை நீர் நடத்திய,
செயல்களை நாங்கள் நினைத்து,
நன்றியுடன் உம் தாழ் பணிந்திப்போ,
வாழ்த்தியே அஞ்சலி செய்கிறோம்.

4 ஏழைகள் சிறுமையில் எங்களை,
நீர் நினைத்திந்தப் பாலனை,
வேளை பார்த்துத் தந்திம்மட்டும் காத்தீர்,
ஸ்தோத்ரம், ஸ்தோத்ரம், க்ருபா நாயனே.

5 பிதாவே! இப்பிள்ளை பாதம் வைக்கிறோம்,
யேசுவைப்போல் வளர்த்திடும்,
"வேதன்" 'ஞானமும்' அன்பும் 'ஆயுளும்"
வேண்டும் யாவையும் தந்தாண்டிடும்.

6 யேசுவே! இந்தப் பிள்ளை நின்கரம்,
ஏந்தி தயவாய் 'உம் நிழல்''
வாசஞ் செய்திட க்ருபையால் ஆண்டு,
ஆசீர்வதியும் கெஞ்சுறோம்.

7 நீரே எங்கள் 'புகலிடம்' கோட்டை,
நல்ல மேய்ப்பன் ரட்சகரும்,
வேறே யாரிடம் நாங்கள் போவோமே,
அணைத்து சேர்த்து ஆதரியும்.

---

## 28

Tune எல்லாம் ஏசுவே

ஸ்தோத்ரம், தேவனே, எனதுள்ளம் ஏற்றுதே;
ஸ்தோத்ரம், துதி, புகழ், கீதம் என்றும்—உமக்கே.
1 பாவி ஏழை, துரோகியை, அனுதினேசம் கொண்டு நீர்,
பாவம்நீக்கி ரட்சித்தென்னை,ஆவியாலே ஆட்கொண்டீர்.
2 அன்பு, சத்யம், ஜீவனும், அருள், வழி, வார்த்தையும், நீர்,
இன்பம், சுகம், செல்வமும் நீர் இருளில் வெளிச்சம் நீர்.
3 என் தன் ஜீவன், ஞானமும்,நீதி,சுத்தம் சந்தோஷமும்,
உன்தன் மைந்தனாலே தந்தீர், க்ருபையான ரட்சிப்பும்.
4 சத்ய வார்த்தை அக்னியால் சகல குப்பை எரித்தீர்;
நித்ய ஜீவ பாதையிலே, நிலையாய் நடத்தினீர்.
5 என் தன் ஞானம் பொக்கிஷம் "ஏசுவில்-தேவன்மாம்சமே".
சிந்தையிலே நான் மகிழ்ந்து, பாராட்டும் என்
மேன்மையே.
6 பிள்ளைகள், பௌத்ரரையும், சகோதரர், உம்வார்த்தையும்,
உள்ளம் ஆள ஏசுவையும், ஈந்தீர் எல்லா நன்மையும்.

7 வேண்டும் நன்மைகள் யாவும், வேளை வேளையே தந்துநீர்,
ஆண்டுஆண்டாய்காத்து என்னை இம்மட்டும் நடத்தினீர்.
8 என் நிழல் சாயும் வேளை, எப்போவென்று அறியேனே,
நின்னிழல் ஒதுக்கில் காரும் சத்ரு ஜெயம் நிச்சயமே

or (காத்து) or (தாருமே)

9 தேவனே தான் என் பிதா, தேவசுதன் என் ரட்சகர்,
தேவ ஆவி என்னை ஆண்டு ஊட்டித் தேற்றிக் காப்பவர்.
10 நானே உயிர்தெழுதல், என்னுடன் வைத்துக்கொள் வேனே,
"நானே உன் ஜெயம், உன் ஜீவன் நம்பு நான் கைவிடேனே."

---

## 29

*Chorus* 1

இன்றுமென்றும், இன்றுமென்றும்,
என்னுயி தேற்றி துதிக்கச்செய்யும்,
'அன்று' ஆட்கொண்டீர் அழித்திடாமல்,
இன்றென்றுங் காத்து உம் ராஜ்யம் சேரும்.

2

தேவனே நான் ஏழை, (பேதை)
உமதாவியால் தாங்கிடுமே (போதியுமே)

3

கிருபை வெள்ளம், கிருபை வெள்ளம்,
அற்புதம் என்னையும் எட்டுது;
களங்க மில்லா வற்றா நதி,
அற்புதம் என்னையும் எட்டுது.

# Index

## PART I

அ



ஆ



இ



உ

எ



ஏ



ஒ

Q6:417
N34

## PART II



67747

